ஆங்கில மகா கவியாகிய

ஷேக்ஸ்பியர்

இயற்றிய

# பிரசண்டமாருதம்



தமிழில்

வசனமாக்கியது

ஸ்ரீ. அ. திருமலைக்கொழுந்து
எட்டயபுர சம்ஸ்தானம்



1913



விலை அணா 8.
காலிகோ அணா 12.

உ

காப்பு

தன்றேருஞன்கின் ஒன்றுகைமிகூஉம்
களிறு வளர்பெருங் காடாயினும்
ஒளிபெரிது சிறந்தன்று அளியவென்னெஞ்சே

# நூன்முகம்

தவளத் தாமரை*த் தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ்க் குறித்தே.

---



ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பியர் (Shakespeare) காலஞ்சென்று இற்றைக்கு முந்நூறு வருஷம் நிரம்பாநின்றது. 'வாமன*னாய் வந்த திருமால் தமது குறளடியிரண்டால் உலகம் முழுமையும் அளந்தனர்; திருவள்ளுவரோ மாந்தரது அறிவையெல்லாம் தமது குறளடியிரண்டால் அளவை கண்டார்' எனும் கருத்துத் தோன்ற வோர் சங்கப்புலவர் பொய்யாமொழியனை வாழ்த்தினர். ஆங்கில காளிதாசனெனத் தகும் ஷேக்ஸ்பியர் மாந்தரது உள்ளமனைத்தையும் தாமியற்றிய நாடகங்களின் வாயிலாக ஆழங் கண்டனர். இவர் பிறந்தது கி. பி. 1564-ம் ஆ, புவி வாழ்வை விட்டு நீங்கியது கி. பி. 1616-ம் ஆ.

இவரது காலத்திற்முன் ஆங்கில நாட்டின் புகழ் பலமுகங்கொண்டு எங்கணும் தனது ஒளியைக் கான்றது.* அக்காலம் அதனைச் செங்கோல் செலுத்தியது, எலிசபெத் எனும் கன்னியரசி.

சமயம் ரோமமையால் மூலையிற் றூங்கிக்கொண்டிருந்த நூல்களெல்லாம் அச்சு வாகனத்திலேறி மக்கட்குத் தரிசனமாகி அறிவிற்சமுதாட்டி அதனைப் பிரகா

சிக்கச்செய்தன. டிரேக் (Sir Francis Drake) என்னும் கடல்வீரன் தனது குன்ற வூக்கத்தாலும் தோள்வலியாலும் தனது நாவாய்களைச் செல்லுதற்கரிய பலவிடங்கட்குச் செலுத்தி இஸ்பானியரது கொட்டத்தை யடக்கி அவர்கள்கப்பலைக் கொள்ளைகொண்டு எட்டுலக்ஷம் சாவரன் பெறக்கூடிய பெருநிதியை கன்னியரசிக்குக் காணிக்கை சமர்ப்பித்தலும் அம்மகாராணி அவனுக்கு வீரபட்டங் கட்டவே, அவனது புகழ் இலண்டன் நகரத்தில் வீடுகடோறும் மாளிகைகடோறும் அறச்சாலைகடோறும் பானச்சாலைகடோறும் முழங்க வாரம்பித்தது. இவனது தோள்வலியால் இஸ்பானியாதேசத்து முரண்* படைத்த போர்க்கப்பல்களைத் தலைகவிழவடித்து வெற்றிக்கொடி நாட்டி அன்றுமுதல் ஆங்கிலநாடு கடற்காசியாகப் பிரகாசியாநின்றது. அக்காலத்திற்றான் வாணிப தந்திரம் கைவந்த சில ஆங்கிலேயர் கன்னியரசியின் அநுமதி பெற்று பரதகண்டத்தை நாடிவந்தனர். இவரையே தமிழ் நாட்டார் கும்பெனியார் The East India Company எனக் கூறுவது. ராலி (Sir Walter Raleigh) எனுமோர் அறிஞன் நவ*பூமியாகிய அமெரிக்காவிற்குச் சென்று அதனது வளத்தையும் ஐசுவரியத்தையுங் கண்டு தனது நாட்டார்க்கும் அரசிக்கும் விளக்கினன். இவனே புகையிலையை முதல் முதல் ஐரோப்பாவிற்குக் கொண்டுவந்து காட்டினதாகக் கூறுவர். ஓர் சமயம் இவன் புகையிலைச் சுருட்டை வாயில்வைத்து ஆர்வத்*தோடு தூமத்*தை யுண்டாக்கி அதனது கந்தத்தை யானந்தங்கொள்ளுமமையம், அஃது அவனது முக முழுமையும் கவிந்து கொண்டு அவனது வதனத்தை * மறைக்கவே, அவனது

பணிவிடைக்காரன் தனது எஜமானனை நெருப்புப்பற்றிக் கொண்டதெனப் பதறிக் கடிதுசென்று ஓர் கும்பம் நிரம்ப உதக*த்தை மொண்டுவந்து அபிஷேகஞ் செய்து தனது எஜமானனது நகைப்பிற்கிடமாயினன். ஆங்கில நாட்டாருள் அறிவை உள்ளவா வெல்லை கண்டவனென மதிக்கத்தகும் பேக்கன் (Lord Bacon) எனும் பெரியோன் தனது வியாசமஞ்சரியால் மாந்தற் கறிவமுத மூட்டிவந்தான். இஸ்பென்ஸா (Sir Edmund Spencer) என்பான் மோகினி ராணி (Fairy Queen) எனும் அரியநூலை ஓர்சிறிது வெளிக்காட்டி ஆங்கில பாஷைக்கு என்றுமில்லா கம்பீரத்தைக் கொடுத்தான். அருளாளனாகிய சிட்னி (Sir Philip Sydney) என்பான் அக்காலம் வீரருட்டலைவனாகவும், குணக்குன்ற*மாகவும் விளங்கினதன்றிச் செவிச் செல்வத்தால் நிரம்பிய தனது உன்னத வறிவால் ஆங்கிலபாஷையில் பத்தியமும் * கத்தியமும் * எழுதி அம்மொழியை கிரீக்கிற் கேனும் லற்றினிற்கேனும் பின்னிடாது ஒப்ப நடக்கும் ஆற்றலை* யதற்களித்தவனெனக் கூறுநிற்பர். தனக் கென வாழாது பிறர்க்கெனவே வாழ்ந்த இவ்வாங்கிலத் தோன்றல் வீரர்கட் கியைந்தவண்ணம் யுத்தபூமியிலேயே தன தின்னுயிரைத் துறக்க நேர்ந்தது. இப்பெரியோன் குண்டுபட்டு ரணக்களத்தை விட்டுத் தனது கூடாரத்திற் குக் கொண்டுபோகப்படும் ஸமயத்தில் மிகவும் நீர்வேட்கை மீதூர்ந்தெழுந்ததால் யுத்தபூமியிற் கிடைத்தற்கருமை யான தண்ணீர், ஓர் சிறிது, கிண்ணத்தில் கொண்டுவரப் பட்டது. அதனை யாவலோடு பருகுகிறதற்காக வாய்க் குக் கொண்டுபோகும் ஸமயத்தில், ஓர் படன் * தானும்

ரணக்களத்தில் காயமுற்று வைத்தியசாலைக்கு தூக்கிக் கொண்டு போகப்பட்டவன், அக்கிண்ணத்தைக் கண்ணுற்று அந்நீரின்மேல் ஏக்கங்கொண்ட குறிப்பைக் காட்டினன். உடனே நமது பேரருளாளன் நீர் பருகுவதைவிட்டு 'உனது தாபம் எனதினும் மேலதாம் போலும்' என அக்கிண்ணத்தை அச்சிப்பாய்க்குக் கொடுத்துவிட்டுத் தானுயிர் நீத்தான். மரணமுறுந் தருவாயினும் பேரருள் சுரக்க வல்லாருமுளரோ! அக்காலம் ஆங்கிலபாஷையை உன்னத ஸ்தானத்திற்கேற்றிய பெரியர் இவர்களேயன்றி மற்றும் பலருளர். கல்விச் செல்வம் நிரம்பிய பென் ஜான்ஸன் (Ben Jonson) என்பான் நகைச்சுவை ததும்பும் தனது நாடகங்களால் மாந்தரை மகிழ்வித்து அவரது அறிவை ஒளிவீசச் செய்தான். மார்லோவெனும் ஓர் நாடக வாசிரியனும் மற்றும் பலரும் ஆங்கில பாஷைக்குச் செய்த வுதவி மிகவும் பெரிதே. சந்திரோதயமாதலும் உடுக்கணங்க*ளின் ஒளி சிறிது குன்றி வெண்டிங்களே மேம்படப் பிரகாசிப்பதை யொப்ப மகாகவியாகிய ஷேக்ஸ்பியர் தலையெடுத்த காலை மற்றைப் புலவர்களது புகழ் வலிகுன்றியது. இவர் ஆங்கில மொழிக்கு என்றுமில்லா வாற்றலை யுதவி அஃது ஓர் மொழிக்கும் பின்னிடாது இனிது தழைத் தோங்கச் செய்தனர்.

ஜகமெல்லாம் புகழ்பெற்ற நமது ஷேக்ஸ்பியர் தாம் நாடகவாசிரியராய்ப் பல வரிய நாடகங்களை யியற்றியதன்றியும், தாமே நாடக வரங்கி * லேறித் தாமெழுதிய நாடகங்களை உள்ளபடி நடித்துங் காட்டினர். அதனுற்றமது நாடகம் எவ்வாற்றால் மாந்தர்க்குறுதி விளைவித்

துப் பயன் றருகின்றதெனும் இரகசியத்தை யநுபவத்திற் கண்டுகொண்டார். ஆகவே பின்னர் தாமியற்றிய நாடகங்கள் பல்லாற்ருனும் மாந்தாராற் கொண்டாடத் தகுந் தன வாயின.

மகாகவியாகிய ஷேக்ஸ்பியர் கலாசாலையிற் றக்கபடி கல்வி கற்றவரல்லர். ஒருகவி இவரைக் குறித்து 'லற்றீன் பாஷை ஓர் சிறிதே தெரியும், கிரீக்கோ அதனிலும் மிகவற்பமாகவே தெரியும்'[1] என ஏளனம் பண்ணினன். மற்ருேர் கவி நமது மகாகவியை 'இவன் நமது அழகிய சிறகுகளை யணிந்துகொண்டு டம்பமாய் உயரக் கிளம்பப் பார்க்கும் காக்கை?'[2] என வவதூறு செய்தனன். ஆங்கிலக் கவிஞர் பெருமானகிய ஷேக்ஸ்பியர் தமது மதிநுட்பத்தால் தமது சிறு கல்வியைக்கொண்டே பெருங் கல்விமான்களது அறிவையும் எளிதே புறங்கண்டார்.

ஓர் காலம் ஆங்கில ராஜஸ்தானக் கவிஞவாகை சூடி நின்ற டிரைடன் (Dryden, poet-laureate) என்பவர் நமது மகாகவியைக் குறித்துப் புகழ்ந்த அருமையைப் பாரீர்! பாரீர்!! *

'ஷேக்ஸ்பியரது விஞ்சையை எவரேனுங் கண்டுபிடித்துக் * கையாள நேருமோ! அவர் கோலிய * மண்டலச் சக்கர*த்துள் அவரையன்றி மற்றெவரே அடியெடுத்து வைக்க வல்லார்!' 3

'ஷேக்ஸ்பியர் எதனையேனும் வர்ணிக்கின் அஃது கட்புலனிற்கு மட்டுமோ தரிசனமாவதுபோற் ருேன்ரு

1. Little Latin and less Greek.
2. An upstart crow beautified with our feathers.
3. Shakespeare's magic could not copied be
Within that circle none durst walk but he.

நிற்கும் ; பரிசத்திற்கும் கிட்டுவது போலன்றோ அணித் தாகாநின்றது. அவரை நிரம்பிய கல்விச் செல்வமில ரெனச் சிலர் கூறுவதால் அவரது புகழ் மற்றும் மேம் படப் பிரகாசியாநிற்கும். அவரது ஞானம் நூல்க ளின் வாயிலாக விளையாது சுயமாகவே ஜகத்தைநோக்கி விளைந்ததாம். திருஷ்டியில் தோஷ முற்றவர்க்கே மூக்குக்கண்ணாடி வேண்டியதன்றித் தோஷமில்லார்க்கு அஃது வேண்டுவதன்றாம் ; அவ்வாறு மழுங்காத தமது கூரிய வறிவால் நூல்களின் உதவியின்றியே ஜக மாயையை ஊடுருவி நோக்கி சகல பொருள்களது அந்த ரங்கத்தையும் கண்டார்'.

இவ்வாறு டிரைடன் கூறியது முகமன*ன்றும். ஏனெனில் ஷேக்ஸ்பியரே தாமியற்றிய ' நீ நினைத்த வண் ணம்' (As you like it) எனும் நாடகத்தில் இவ்வுண் மையைத் தெற்றெனக் காட்டினர்,

'[4] மாயப் பிரபஞ்சமாம் இம்மண்ணுலக வாழ்வின் கண்ணும், யாம் மனுஷ சஞ்சாரமற்ற ஏகாந்த ஸ்தானத் தைக் கிட்டின், விருக்ஷங்கள் நம்மோடு வாய்திறந்து பேசுவதாகவும் ; பாய்ந்தோடும் நீரோடைகள் அரிய நூல் கள்போல் அறிவை விளக்குவதாகவும் ; சிலாதலங்கள் * உபதேசஞ் செய்வனவாகவும்; ஒவ்வொருபொருளும் ஏதே னும் நன்மையையே நமக்குப் புரியவல்லதா யமைந் திருப்பதாகவும், உள்ளவா காணலாம்'.

ஆங்கில கவிஞருள் தெய்வப் புலவனெனத்தகும்

---

4 This our life, exempt from public haunt,
Finds tongues in trees, books in the running brooks,
Sermons in stones, and good in everything.

மிலிட்டன் நமது ஆங்கில காளிதாசனே 'கற்பனையின் குழவியாகிய மிக்குயர்ந்த இனிமைவாய்ந்த ஷேக்ஸ்பியர்' எனக் கூறியதுவும் மறக்கற் பாலதன்று.

இம்மகாகவி யெழுதிய நாடகங்கள் முப்பதிற்கு மேற்பட்டன ; சில ரோமாபுரி சரித்திரத்தை யொட்டியும், சில ஆங்கில தேயத்துச் சரிதத்தைத் தழுவியும், மற்றையன வேறேதேனும் ஓர் மெய்ச்சம்பவத்தை * அநுசரித்துமே எழுதப்பட்டனவாம். இவர் தமது நாடகங்களெனும் அணிகலங் * கட்கு வேண்டிய நவமணிகளை வேணமட்டும் தோண்டி யெடுத்தற்குரிய அருஞ்சுரங்கமாக விருந்தது புளூட்டார்க்கன் எழுதிய சரிதங்களே (Plutarch's Lives).

இவர் எழுதிய சிறந்த நாடகங்கள் பெரும்பான்மையும் சோகரஸந் தருவன. ஓவ்வோர் நாடகத்தின் வாயிலாகவும் ஏதேனு மோர் பெரும் உறுதியை விளக்கினர். பேராசையா லுந்தப்பட்டவன் மதியிழந்து முடிவில் நாசமுறுவானென்பதை மக்பத் (Macbeth) விளக்கும்.

வரம்பு கடந்து பண ஏக்கங்கொள்ளும் பித்தன் பாபத்துக்கஞ்சாது வினைபுரிந்து முடிவில் இழிஞனுவானென்பதை வெனிசு வாணிபன் (Merchant of Venice) என்னும் நாடகம் விளக்கும்.

மனைவியின்பால் மெய்யை முழுமுற்றும் ஆராயாது அசூயை * கொள்வோன் மனவாதைக்காளாகி முடிவில் நாசமெய்துவனென்பதை அதலவீரன் (Othello) என்னும் நாடகம் விளக்கும்.

இவ்வாறே ஒவ்வொரு நாடகமும் ஓவ்வோர் மெய்ப்பொருளை நிறுவும். இவற்றுள் எதினினும் மேம்பாடுடை

யது அருளுடைமை யென்னும் பேரறத்தைச் சுட்டு வதாய் நமது கவி கடை முடிவாயெழுதிய

# பிரசண்டமாருதமே

மெய்ப்பொருள் காணவல்ல பேரறிஞர் ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களுள் இதுவே பல்லாற்ருனும் மற்ற வற்றைப் புறங்கண்டு அழியாப்புகழ் பெற்ரேங்குவ தெனக் காண்பர்.

இதுவே நமது கவிஞர் கடைமுடிவாய் எழுதிய காவிய மென்பதனை நிறுவப் * பல நிதரிசனங்களுள. இந்நாடகத்துள் இனி யோர் நாடகமும் எழுதுவதில்லை யெனும் பிரதிக்கினையை ஷேக்ஸ்பியர் கொண்டிருந்ததாக மதித்தற்குப் பல ஹேதுக்கள் காணப்படும். ஆசிரியரே இந்நாடகத்தைத் தமது மற்றை நாடகங்களினும் மேம்பா டுடையதாக மதித்தனரென வெண்ணுதற்கும் சில சங் கேதங்களை * இதன்கண் காணலாம். இந்நாடகத்துள் முக்கிய பாத்திரமான இலக்ஷிமீகரன் ஷேக்ஸ்பியரே இலக்ஷிமீகரன் தனது மந்திர சாஸ்திரங்களை மண்ணுள். ஆழப்புதைத்துத் தெய்வங்களைப் பணிகொள்வதை விட்டு விலகிய குறிப்பு, ஷேக்ஸ்பியர் இனித் தான் தனது சிற் சக்தியைப் பணிகொணிடு ஓர் நாடகமும் எழுதுவதில்லை யெனச் செய்துகொண்ட சங்கற்பமாம்.

இதான்றியும், மற்றை நாடகங்களைத் தமது மனம் ஊக்கியவாறே நாடகவிலக்கணங்களின் வரம்பைப் பொருட்படுத்தாது எழுதிய இவ் ஆங்கில மகாகவி இந் நாடகத்தைத் தொல்லாசிரியர்கள் * கட்டிய வரம்பை

மீருது நாடக வமைதிக்கிணங்க எழுதினர். எவ்வாறெனின் கிரீக்காகிய ஆதி நாடக வாசிரியர் ஒவ்வோர் நாடகமும் முக்கூற் றொற்றுமையை [5] க் கொண்டிருக்க வேண்டுமென இலக்கணித்தனர். அம் முக்கூறுகளாவன,—

i இடவோற்றுமை
ii காலவோற்றுமை
iii வினையோற்றுமை

i. இடவொற்றுமையை விளக்குதும். நாடகத்தைத் தரிசிப்பவன் ஒரே இடத்திற்றானே யிருக்கக்கூடும். நாடகத்துட் காட்டப்படும் பல காக்ஷிகளும் ஒருவன் இடம் விட்டுப் பெயராது ஒரேயிடத்திலிருந்தே பார்க்கக் கூடியதா யிருக்கவேண்டும். இதுவே இடவொற்றுமை இவ்வாறன்றிக் கூத்தில் தரிசனமாகும் காட்சிகள் உள்ளவா சேய்மை * யான பலவிடங்களில் நடர்தவைகளா யிருப்பின் நாடகம் பார்ப்போன் பற்பல விடங்கட்குத் தான் போவதாய் பாவிக்க நேர்வதால் அந்நாடகம் இடவழுப்படும். பிரசண்டமாருதமெனும் இந் நாடகமோ கடற்கரையருகே மூழ்கும் ஓர் கப்பலையும் அக்கரையோரத்தில் நிகழும் சில காட்சிகளையுமே காட்டுவதால் இதன்கண் இடவழுவிற் கிடனின்று.

ii. இனிக்காலவொற்றுமையைச் சிறிது விளக்குவாம். நாடகத்தைத் தரிசிப்பார் பத்து நாழிகைக்கு மேற்பட நாடகவரங்கத்திற் கட்டுப்பட்டிருக்கக் கூடாதன்றே.

5. The three Dramatic unities, namely,
i unity of place,
ii unity of time
iii unity of action

அந்நாடகம் பலவருஷக் காட்சிகளையேனும், பலமாதக் காட்சிகளையேனும், அல்லையேல் பலநாட்களின் காட்சியை யேனும் தரிசிப்பிப்பின் அந்நாடகத்தைத் தரிசிப்பவன் தான் வீற்றிருந்த பத்து நாழிகைக்குள் அக்காலவெல்லை யைக் கடந்த பல காக்ஷிகளைக் கண்டதாக நேரும். அவ்வா ருயின் அஃது காலவழுப்படும். இந்நாடகத்துட் காட்டப் படும் கப்பற் காக்ஷியும் பின்னர் இலக்ஷ்மீகரன் தனது எதிரிகளைப் பச்சாத்தாபத்திற்* குட்படுத்திப் பகைமை நீங்கி அவர்களை சிநேகபாவங் கொண்ட விஷயமும் மற்றச் செயல்களும்,யாவும் ஓர் சாயங்காலப் பொழுதிலேயே நேர்ந் தனவாக குறிப்பிக்கப்பட்டிருத்தலின் இந்நாடகத்துள் கால வழுவுமின்ரும். எவ்வாறெனின், இலக்ஷ்மீகரன் தனது குற்றேவல்புரியும் தெய்வமாகிய ஆரியை நோக்கிக் கூறுவான்,—

இப்போழ்து நேரம் என்ன ?

ஆரியை—நடுப்பகல் கழிந்து போயது.

இலக்ஷ்மீகரன்.—குறைந்த பக்ஷம் இரண்டுமணிக்கு மோசமில்லை. இக்கண முதற்கொண்டு ஆறுமணி வரை யுள்ள காலத்துள் நாம் நமது அரும்பெரும் பணிகள் யாவற்றையு முடிவு காணவேண்டும்.

இவ்வாறு ஷேக்ஸ்பியர் இலக்ஷ்மீகரன் கூறியதாகக் காட்டியது பிரசண்டமாருதமெனும் தமது நாடகக் காப் பியம் முன்னோர் கூறிய விலக்கணங்களைப் போற்றியே காலவழுவிற் கிடங்கொடாது எழுதப்பட்ட தென்பதனை ஐயமின்றி யாவரும் தெரிதற்பொருட்டே.

iii. இனி, இந்நாடகம் வினைவழுவு மின்ரும். வினை யொற்றுமை யென்பது நாடகத்துட் காட்டப்படும் சகல

செயல்களும் (விஷயங்களும்) கதைப்போக்கிற் கியைந்து உறுதி பயக்கவேண்டு மென்பதாம். கதைப்போக்கிற் கியைவு பெறாத விஷயம் காலவழுவும் இடவழுவு மின்றி யிருப்பினும் வினைவழுவின் பாற்படும். இந்நாடகத்துட் கூறிய சகல விஷயங்களும் கதாநோக்கத்திற் கொத்துப் பயன் படுவதை வாசிப்பவர்கள் எளிதே யுணர்ந்து கொள்வர்.

இவ்வரிய நாடக முகத்தால் நமது ஆசிரியர் அருளின் சிறப்பைத் தொனிக்கக் காட்டினர். பகைவரைப் பழிவாங்கி யின்புறுவதினும் அவர் பக்கல் அருள் பாலிப்பதே பேரறம் எனும் மெய்ப்பொருளைக் காட்டுதற்கே இந்நூல் எழுந்ததெனச் செப்பலாம். நிற்க

இந்நாடகத்துள் வந்துள பாத்திரங்களது பெயர் தமிழ்ச் செவிக்கேற்கும் வண்ணம் சிறிது அருத்தத்தைக் கொண்டும் சிறிது சப்தத்தை யொட்டியும் திரிக்கப் பட்டன. Ariel எனும் தெய்வம் ஷேக்ஸ்பியரால் ஆண்பாலிற் கூறப்பட்டபோதிலும் அதனது செய்கைகள் பெண்பாலிற் குரியனவாய் காணப்படுகின்றமையானும் சக்திகளெல்லாம் பெண்பாலாய்க் கூறப்படுவதே சிறப்பாகலானும் அத்தெய்வத்தை ஆரியை எனப் பெயரிட்டுப் பெண்பாலாக்கியுளேன். ஷேக்ஸ்பியரது நாடகங்களுள் பலவற்றை சிறுவர்க்கும் சிறுமியர்க்கும் அறிவு புகட்டக் கருதி ஓர் ஆங்கில துரையும் அவரது சகோதரியும் ஆங்கில பாஷையில் சுருக்கி வசன ரூபமாகப் பயந்தனர். பிரசண்ட மாருதமும் அவற்றுள் ஒன்றாம். இத்தமிழ் நூலோ அதனையோர் சிறிது தழுவி அன்னோர் காட்டாது

விட்ட பலவரிய விஷயங்களேயும் தெரிக்கற்பாலது. நாடகச்சுவையை ஆங்காங்குக் காட்டக் கருதிப் பற்பல விடங்களில் சம்பாஷணங்களேயும் காட்டியுளேன்.

கப்பல் கடலுளாழ்வதாக ஷேக்ஸ்பியர் காட்டும் முதற்காக்ஷியைத் தமிழ்ப்படுத்தி இந்நூலோடொட்டி வாசித்தற்காக நூலுக்கு முன் இவ் முகவுரையி னிறுதி யில் வைத்துளேன்.

நூலுட் குறிப்பாயுணர்த்தப்பட்ட சில விஷ்யங்க ளேத் தெளிவுற வறிதற்கு அநுகூலமாக விருக்கு மென் பதை நோக்கியும், நாடகங்களுள் ஏற்பட்ட நவரசங்க ளுள் நகைச்சுவையை (ஹாசிய ரசத்தை)க் காட்டுதற்கு இயன்றதெனவுங் கருதி மற்ருேர் காக்ஷியை இப்புத்தகத் தின் இறுதியில் ஓர் அநுபந்தமாக வைத்துளேன்.

அரிய பதங்களின் பொருளே விளக்குதற்காக வோர் அரும்பத விளக்கத்தையும் கடைக்கண் அமைத்துளேன்.

எங்கணும் ஈசன் அருள் தழைத்தோங்கி இம்மண் ணுலகம் இனிது வாழ்க.

20th Feb 13. அ. திருமலேக்கொழுந்து.

---

# பிரசண்டமாருதம்

---

## நாடகம் நிகழிடம்

---

மத்தியதரைக் கடலுள் ஆழுமோர் கப்பல் :

பின்னர் ஓர் தீவு (ஆழுங்கப்பலருகேயுள்ளது)

## நாடகத்துள்வந்துள பாத்திரங்கள்.

அலஞ்சன் (Alonso)—புதுவைநகர் அரசன்.

சிவாதித்தன் ( Sebastian)—முன்னவன்றம்பி.

இலக்ஷ்மீகரன்(Prospero)—தேசப்பிரஷ்டனுன மிலான் தேயத்துக் குறுநிலமன்னன் ; மந்திரயோகி ; போறிஞன்.

கீர்த்திசேனன் ( Antonio)—முன்னவன் றம்பி ; இவன் தனது தமையனது பட்டத்தை மறநெறியாற் பற்றிக்கொண்டவன்.

பரிதனன் (Ferdinand)—அரசிளங்குமரன் ; அலஞ்சனது புத்திரன்.

காஞ்சாலன் (Gonzalo)—அலஞ்சனது கிழமந்திரி ; ஒப்பரிய குணவாளன்.

திப்பன் (Stephano)— ஒரு குடியன் (a drunkard).

திருங்கன் (Trinculo)—ஒரு விதூஷகன் (a jester).

மீகாமன் (Captain)—கப்பற்றலைவன்.

தோணிக்காரன் (Boatswain)—கப்பற்றலைவன் கீழ் உத்

தியோகஸ்தனுய்க் கப்பலோட்டிகளை யழைத்து வேலை வாங்குவோன்.

கலியன் (Caliban)—நாகரீகமற்ற வோர் விகார யாக்கையன் ; இலக்ஷ்மீகரனது அடிமை ; சிக்கராக்கியின் புதல்வன்.

மிரந்தை (Miranda)—இலக்ஷ்மீகரனது அரும்புதல்வி ; அருளும் கற்பும் வாய்ந்தவள்.

சிக்கராக்கி (Sycorax)—கலியனையீன்றதாய் ; தீத்தொழில் வல்ல யோகினி ; a witch.

ஆரியை (Ariel)—ஓர் மருத்து தேவதை ; இலக்ஷ்மீகரனுக்கு உகந்த தொண்டுபுரிபவள்.

மற்றுஞ்சில தேவதைகள் —இவை காளி, அம்பிகை, இலக்ஷ்மியென வுருவெடுத்து ஓர் நாடகமாடின, மற்றுஞ் சிலவேடங்கொண்டும் தொழில் புரிந்தன.

---

## இந்நாடகத்துட் கூறப்பட்டுள நாடு நகரங்கள்.

புதுவைநகர் (Naples) : இஃது இற்றுலி தேயத்துள்ள அழகுவாய்ந்த வோர் நகர்; 'புதுவைநகரைப் பார்த்த பின்சா' வெனவோர் முதுமொழியுளது.

மிலான் (Milan)—இதுவும் இற்றுலிதேயத்துள்ள வோர் நகரம்.

தூனியம்பதி (Tunis) — ஆப்பிரிக்காவின் வடகரையிலுள்ள நகரம்; இதுவே பண்டையில் கார்தேஜ் நகரம் (Carthage).

ஆங்கிலநாடு (England).

---

ஓம்
திருச்சிற்றம்பலம்.

# முதற்காட்சி

## கப்பலாழும் தரிசனம்

[கொந்தளித்தெழுங் கடலில் ஓர் கப்பல்; பிரசண்டமாருத சப்தம் கேட்கின்றது, கப்பல் அலமாராநின்றது.]

மீகாமன்—ஏ தோணிக்காரா!

தோணிக்காரன்—இதோ ஐயா, யாது பணி?

மீகாமன்—சமயத்திலுற்றாய், சந்தோஷம், கப்பலோட்டிகளை யழைத்து வேலையை துரிதிற் பார்; சிறிது தாழ்ப்பையாயின் கப்பல் கரைதட்டி நாசமுறும்; முடுகு, முடுகு.

[மறைகின்றன்.]

தோணிக்காரன்—ஏ எனதுயிர்காள்! மனங் கலங்காது உற்சாகத்தோடு கடிதில் வேலையை முடிமின். மேலிருக்கும் பாயைக் கீழே இழுத்துத் தள்ளுமின்; மீகாமன் சீட்டி யடிப்பதைக் கவனித்தொழுகக் கடவீர்—சீ மூதேவிக்காற்றே! வேண்டுமாயின், நீ உனது ஈரல் வெடித்துப்போமட்டும் வேகங்கொண்டடி. உன் கையால் ஆனதைப் பார்.

[அலஞ்சனும், சிவாதித்தனும், கீர்த்திசேனனும், பரிதனனும், காஞ்சாலனுதியரும் வருகின்றனர்.]

அலஞ்சன்—தோணிக்காரா! ஜாக்ரதை. உனது எஜமான் எவனுள்ளான்? வீரவான்களெனக் காட்டுமின். அஞ்சல்.

தோணிக்காரன்—இருக்கட்டு மையமாரே, சிறிது கீழே போங்கள்.

கீர்த்திசேனன்—மீகாமன் எங்கே யப்பா?

தோணிக்காரன்—அவர் சீட்டியடித்து வேலைவாங்கும் சப்தம் தங்கள் செவியிற் றைக்கவில்லையா? இருக்கட்டும் நீங்கள் எங்களது வேலையைக் கெடுக்கின்றீர்கள். கீழே போமின்; புயலுக்குதவி செய்யற்க.

காஞ்சாலன்—இருக்கட்டுமேப்பா, கோபப்படாதே!

தோணிக்காரன்—கடல் கோபப்படாமலிருந்தாலல்லவோ? சீக்கிரம் தொலைந்துபோங்கள். மலைபோலெழும் இவ்வலைகள் ராஜனென்று வைத்துப் பார்க்கின்றனவா. கீழ்த்தட்டிற்கு செல்மின். ஊம், பேச்சு வேண்டாம். வீண் தொந்தரவு கொடாது கீழே தொலையுங்கள்.

காஞ்சாலன்—நீ சொல்வது யுக்தம்தான்—ஆயினும் இக்கப்பலில் வந்துளார் எத்தகைய பெரியாரென்பதைக் கவனித்து மரியாதையாகப் பேசடா!

தோணிக்காரன்—மரியாதையா!!! எனதுயிரினும் நீங்களெனக்குச் சிறந்தவர்களாவீரோ! நீர் யாவருக்கும் நல்லறிவு கொளுத்தி நல்வழிப் படுக்கவல்ல மந்திரி யாரன்றே! எங்கே உமது சாதுரிய வசனத்தால் வாயுபூதத்தை வசக்கி மாருதத்தைத் தணித்து சுகத்தை விளைவியும் பார்ப்போம்! நாங்கள் ஒருவ

ரும் ஓர் கயிற்றையும் தொடுவோமல்லேம். எங்கே உமது அதிகாரத்தைப் பார்ப்போம்! வீண் ஜம்பம் என்னவோய்! இவ்வளவு வயதுகாறும் வாழ்வைத் தந்த தெய்வத்தை வாழ்த்தி மரணத்துக்குச் சித்தமாயிரும்.

அடே அப்பமாரே! தைரியத்தை விடாதீர்கள்.

[மறைகின்றான்]

வழியைவிட்டுத் தொலையுங்களேன்?

காஞ்சாலன்—இந்தப் படுபயலால் நாம் ஒருவாறு தைரியங்கொள்ளலாம். நமது கப்பல் நீரிலாழாது. இவனைப் பார்த்தால் நீர்ச்சாவுக்குரியனாய்த் தோன்றவில்லை. இவன் தூக்கு மரத்துக்கென்றே பிறந்தவன். * ஏ தெய்வமே, தலைவிதிப்பிரகாரம் இவன் தூக்குமரத்திலேயே சாகவேண்டியிருக்கும் நியதிப்படி நடத்து. இவனுக் கெப்போழ்து நீர்ச்சாவு கிடையாதோ, நமது கப்பல் மூழ்காது. ஆகவே நாமும் தப்பிப்பிழைப்போ மென்பது சரதம். தூக்குமரச் சாவுக்குப் பிறந்தவனல்லனாயின் நமது நிலை விசனிக்கத்தக்கதே. [யாவரும் மறைகின்றனர்]

[தோணிக்காரன் திரும்ப வருகிறான்]

தோணிக்காரன்—சீக்கிரம் பாயைத் தாழ்த்துங்களடா. ஜல்திஜல்தி.

[யாவரும் மறைகின்றனர்]

---

* தூக்குமரத்திற் சாவப் பிறந்தவன், ஓர்போதும் நீரிலாழ்ந்து மரணமுறமாட்டான் என்பது வெள்ளைக்காரர்களுள் வழங்கு மோர் முதுமொழி.

[உண்ணின்று யாத்திரை வாசிகள் பீதியால் அலாநின்றனர்].

ஈதென்ன பெருங் கூக்குரல்! இவ்வொலி சண்ட மாருதத்தின் ஒலியையும் அடக்கி மேற்செல் கின்றதே!

[கார்ஞ்சாலனும் சிவாதித்தனும் கீர்த்திசேன னும் திரும்பவருகின்றனர்.]

திரும்ப வந்துவிட்டீர்களா! இங்கே உங்கட்கு என்ன வேலை? நாங்கள் வேலையை விட்டு விட்டுச் சும்மாவிருந்து கப்பலை ஆழ்ந்துபோக விட்டுவிடவா. எல்லாரும்தொலைந்து மாண்டுபோதற்கு உங்கட்குப் பிரியமா?

சிவாதித்தன்—என்னடா வீணை பேய்க்கத்துக் கத்து கிறாய்! சீ நாய்ப்பயலே!

தோணிக்காரன்—அப்படியானல் நீங்களே எங்கள் வேலை யைப் பாருங்கள்.

கீர்த்திசேனன்—சீ நாயே! தட்டுவாணி மகனே! என்ன சுத்துக் கத்துகிறாய். செத்துப்போக உனக்கிருக்கிற பயமவ்வளவு எங்கட்குக் கிடையாதடா. மூதேவி!

கார்ஞ்சாலன்—இவனுக்கு ஓர்காலும் கடற்சாவு கிடை யாது. நமது கப்பல் கொட்டாங்கச்சியேயாய் விவஸ்தை கிடையாத விலைமாதைப் போல் பொத்த லுற்றதாயிருப்பினும் இது ஆழவே யாழாது.

[கப்பலோட்டிகள் யாவரும் நனைந்து வருகின் றனர்]

கப்பலோட்டிகள்—எல்லாம் விருதாவாய்ப் போயிற்று எல்லாரும் மாளப்போகிறோம். மரணத்துக்குரிய ஜபம் செய்வார் ஜபம் செய்யுங்கள்.

தோணிக்காரன்—எல்லார் வாயிலும் மண்விழுந்ததா! எல்லாரும் விரைத்துத்தானே போகப்போகிறோம்.

காஞ்சாலன்—அரசனும் அரசிளங் குமாரனும் ஜபம் செய்யாநின்றனர். நாமும் அவ்வாறே செய்து மரணத்திற்குச் சித்தப்படுவோம், வாரீர்.

கீர்த்திசேனன்—குடிகாரப்பயல்களாகிய இக்கப்பலோட்டிகளால் வழிதப்பி யாவரும் சமுத்திரத்திற் கிரையாகாநின்றோம்!

காஞ்சாலன்—இந்தப் பயலைப் பார்த்தால் சமுத்திரத்திலாழ்ந்து சாகும் தோற்றமோர் சிறிதுமில்லையே. கப்பலோ க்ஷணநேரத்தில் ஆழ்ந்து போவதாகவே தோன்றுமாயினும் இவன் நீர்ச்சாவுக் காளாவானென யான் எண்ணவே மாட்டேன்.

[உள்ளேயிருந்து ஓர் பேரொலி]

ஐயோ தெய்வமே! கப்பல் சுக்கல் சுக்கலாய் விட்டதே! ஐயோ குழந்தைகாள்! ஐயோ தம்பிமாரே! ஐயோ கண்மணி! எல்லாரும் சாவோம்!

கீர்த்திசேனனும் சிவாதித்தனும்—நாமும் அரசனோடு சாவோம், வா, போவோம்.

[மறைகின்றனர்]

காஞ்சாலன்—இப்போழ்து ஓர் குழி காய்ந்த நிலத்திற்கு எத்தனை வேலி பூமி வேண்டுமாயினும் கொடுக்கிறேன். யார் தரவல்லார்? கடவுள் சித்தத்தின்படி நடவாநின்றது. அவனருட்படியே நடக்க. ஆயினும் நான் கரையிற் சாகப் பிரியமுறுகிறேனேயன்றித் தண்ணீர்க்கிரையாக மனமெழவில்லை. என் செய்வது! [மறைகின்றனன்.



உ

சிவமயம்

ஆதியிற் றமிழ்நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞானம் நலம்பெறற் பொருட்டே.

# பிரசண்டமாருதம்



பண்டைக் காலத்தில் சமுத்திர நடுவணிருந்த வோர் தீவில் இலக்ஷ்மீகானெனும் நாமத் தணுகிய வோர் வயோதிகனும் வனப்பா லுயர்ந்த மிராந்தையெனப் பெயரிய அவ னது கன்னிகையுமே ஊழ்* வலியால் தனியே வாசஞ் செய்யும்படி நேர்ந்தது. மிக்கிளங்குழவிப் பருவத்தி லேயே நிர்மானுஷியமான இத்தீவிற்கு அவ்விளம்பெண் வரும்படி நேர்ந்ததால் அவளது ஞாபகத்திற் றனது தந் தையது முகத்தைத் தவிர வேறு மாந்தர் முகத்தைப் பார்த்திருந்ததான நினைவுமெழுந்திலது.

தந்தையும் மகளும் மலையிற்குயின்ற* வோர் குகை யைத் தமக்குகந்த வாசத்தலமாகக்கொண்டு உறைந்தனர். அவப்பொழுதைத் தவப்பொழுதாக்கக் கருதிய தந்தை தனது புத்திரிக்கு நல்லாசிரியனாயிருந்து சகல கலைகளை

யும் கற்பித்து வந்தான். இவர்கள் வசித்த இக்குகை பற்பல அறைகளாக வகுக்கப்பட்டிருந்தது. அவ்வறை களுளொன்றனை இக்கிழவன் தனக்கு வித்யாக்கிரக*மாக வமைத்துக்கொண்டு அதன்கண் தனது புத்தகங்கள் அனைத்தையும் பதனஞ் செய்திருந்தான். இந்நூல்க ளுட் பெரும்பாலன மந்திர சாஸ்திரங்களே. அக்காலத்தில் மந்திரசாஸ்திரங்களைக் கற்றுக்கொள்தற்கண் கல்வியறி வுடையார் யாவரும் பெரும் சிரத்தைகொண்டிருந்தனர். இலக்ஷ்மீகரன்பால் அமைந்திருந்த மந்திர நூலுணர்ச்சி யவற்குத் தனது இக்கட்டுக்காலத்தில் மிகவும் நன்மை பயந்தது.

எவ்வாறெனின், உள்ளீட* றிதற்கியலாத வூழ்வலி யால், இவன் தனது இளங்குழவியோடும் கதியற்று அத் தீவிற்றள்ளுண்டு அதனது கரையேறிய காலத்தில், அஃது ஓர் யோகினி*யது விஞ்சையால் வஸியமுற்றி ருந்தது. அவளோ இவ்விருவரும் அந்தத் தீவைக் கிட்டு தற்குச் சில தினங்களின் முன்னரே நாளுலந் திறந்து போயினள். அக்கானகத்தில் வாழ்ந்து வந்த தேவதைகள் பலவும் சிக்கராக்கியெனும் இக்கொடியள் இட்ட அயுக்த மான ஆக்ஞைகளை முடிக்கக் கூசினதற்காக அவளது மந்திரபலத்தாற் பிளவு காட்டிய பெருமரங்களிடையே பூட்டப்பட்டுச் சிறையுற்றுக் கிடந்தன. மாயாஜாலங் கைவந்த அத்துட்டை திடீரென மரணமுற்றதால் இவ் வாறு மரத்திற் சிக்குண்டு ஹிம்சையுற்றுக் கிடந்த அவ் வனதேவதைகள் தமக்குத் துன்ப நிவிர்த்தியாங்காலம் ஓர்போதுங் கிட்டாதென பேரவத்தையு ளாழ்ந்தன. அப் பூதங்கள் ஹிம்சையைத் தாங்கமாட்டாது அரற்றிய*

போழ்து விளைந்த பிராணாவஸ்தா சப்தம் அவ்வனத்திற் றிரிந்த ஓநாய்களையும் வெருட்ட, அவையும் ஊளையிட்டுப் பதறிக் கதறின. கோபமே சொரூபமான காடிகளும், விளைகின்ற தொனிகளால், நெஞ்சம் வெடிபண்டு பீதியெய்தி நடுங்கித் திரிந்தன. அக்கொடியள் தெய்வங்களைத் தனது மந்திர சக்தியால் மரம் பிளந்து அவற்றினிடையே சிறைப்படுத்தினளாயினும், பின்னர் அப்பூதங்களை விடுவிக்கத் தகுந்த ஆற்றல் அவ்யோகினிக்குக் கிடையாது. இலக்ஷ்மீகரன் தெய்வங்கள்படும் கஷ்டத்தை நேரிற் கண்டபோழ்து தனது அபாரமந்திர சக்தியால் அத்தேவதாரு விருக்ஷங்களைத் திரும்ப வாய் திறக்கச்செய்து, கட்டுண்டு கதறிக்கொண்டிருந்த பூதங்கள் யாவற்றையும் இடுக்கணினின்று விடுவித்தான். இவ்வாறு இவ்வறிஞனால் சிறைநீக்கம்பெற்ற பிசாசங்கள் யாவும் பின்னர் அவனது பணிவிடையைச் சிரமேற்கொண்டு முடித்து அவனை மகிழ்வித்து வாாநின்றன. அவற்றுள் ஆரியையென்பது முக்கிய தேவதை. நிற்க.

இலக்ஷ்மீகரற்கு இவ்வன தேவதைகளே யன்றி, கலியன் எனப் பெயரிய வோர் விகாரரூபனும் பணிவிடைக் கமைந்தான். இவன் யாவனெனின், துட்டையாகிய சிக்காாக்கியினுதாத்*திருந்து பாபசொரூபமே யுருப் பெற்று புவியிற் பிறந்த தன்ன மூர்க்கன்.* இலக்குமீகரன் நிர்மானுஷியமாகிய அவ்வனத்தைக் கிட்டியகாலை, தேகத்தில் எத்தனையோ வக்கிரங்*கொண்டு குரங்கினும் மிக்க குரூபியாய் மனிதனெனவெண்ணுதற்கு மொவ்வாத இக்கலியன் மிருகம்போல் வனத்தி லலைவதைக் கண்ணுற்றான்.

அருளைப் பாலிப்பதே கண்ணாகவிருந்த இலக்ஷ்மீகரன் இவ்வக்கிர யாக்கையனைக் காணவே, இரக்கமீதூரலும், அவனை அன்புடன் ஆதரித்துக் குகைக்கிட்டுக்கொண்டு வந்து தன்னாலியன்றவரை பேசும்படி கற்பித்தான். மிருகத்தையொத்த அவற்கோ அக்ஷரங்கள் எளிதில் நாவிலெழவில்லை. ஆகாசத்திற் றிரிதரும் இருசுடர்கட்*குப் பெயரும் மற்றும் சிலபொருள்களது பெயரும் எவ்வளவோ சிரமத்தின்மேல் அவன் நாவால் மொழியக்கூடியவாயின. இலக்ஷ்மீகரன் அவனது மடத்தைப் புறங்கண்டு நல்லறிவு கொளுத்த எவ்வளவோ முயன்றும் கலியனது புத்தி மிருகத்தன்மையையே நாடியது. இலக்குமிகரனது விடாமுயற்சியால் பேசக் கற்றுக்கொண்டானாயினும் நல் வழிக்குத் திரும்பிலன். எட்டிக்குத் தேனையே நீராய்ப் பாய்ச்சினும் அஃது கசப்பதைவிட்டு இனிக்கற்பாலதோ ! பேசக்கற்றதால் கலியன் நமது அருளாளனை வசத்தலைப்பட்டான். இதுமட்டோ. பின்னர் ஓர்நாள் பாபமே யறியாத இளங்கன்னிகையாகிய மிரங்தையைக் கைபிடிக்கவும் பார்த்தான். இதனைக் கண்ட இலக்குமிகரன் உடனே அம்மூர்க்கனை சிக்ஷித்து நற்பணிக்கு அபாத்திரனான வவனை நயமாய் நடத்துவதைக் கைவிட்டு விறகுதலையனுக்கி விறகு சுமத்தல் முதலான கடுந்தொழிற்கண் புகுத்தி இட்ட கட்டளையை முட்டின்றி முடிக்கும்படி ஆக்ஞை செய்தான். தனக்கிட்ட ஆணையை அலக்ஷியத்தாலேனும் மடி*யாலேனும் செய்யாது அத்துட்டன் வாளாவிருப்பின் ஆரியை அவனை எளிதில் விடாள்.

இயற்கையில் சாந்த சீலத்தினளாகிய ஆரியா

தேவதை கலியன்பாற் கொண்ட க்ஷாத்திரம்* எளிதே உங்கட்கு விளங்கக்கூடும். ஆரியையும் மற்றை வன தேவதைகளும் சிக்கராக்கியின்பாலுற்ற பேரிடுக்கண் அவர்களது மனத்தை விட்டகலுமோ! அவள் தமக்குப் புரிந்த அபராதத்திற்குப் பதிலாகக் கோணநடையினளாகிய இவ்மிருகத்தானே வருத்தஞ் செய்தற்கண் ஆரியையும் மற்றைத்தெய்வங்களும் மிகப் பிரீதியை வகித்தன.

நினைத்த தேகமெடுக்க வல்ல ஆரியை, கலியன் தனது பணியின் வழுவின், இலக்ஷ்மீகாரற்கன்றி வேறொருவர் கண்ணிற்கும் தென்படாத தனது அருவமேனியைக் கொண்டு அம்மூர்க்கனே அவனயிராது*கிட்டி, சுள்ளெனக் கிள்ளித் துன்பமூட்டுவள்; அல்லையேல், சேற்றில் தவறி விழ வடிப்பள். பின்னர், ஒரோவழி கண்ணிற்றென்படும் குராக்குரு*க்கொண்டு அவனைப் பார்த்துப் பல்லைக்காட்டி எளனஞ்* செய்வள். பின்னர், குபீரென அவ்வுருவை மாற்றி முள்ளம்பன்றியது கோலத்தளாகி அவன் வரும் வழியிற் படுத்துக்கொண்டு அவனைத் தன்மேல் இடறி விழும்படி செய்வள். கலியனோ, ரக்ஷை பூணாத தனது பாதங்கள் எவண் அதனது முட்போன்ற சிலாகைகளாற் குத்துண்டு ஊறுறுமோவென நடுங்குவன். விசித்திரமான இத்தகைய சூழ்ச்சிகளால் ஆரியை கலியனைத் துன்புறுத்தி எத்திறத்தானும் அவனை அவற்கிட்ட பணியை முடிவிக்கச் செய்வதிற் றவறாள்.

இத்தகைய தெய்வங்கள் யாவும் தனது குற்றேவலை மனங்கோணாது முடிக்கும் பெருவாழ்வை யுற்ற இலக்ஷ்மீகரன், இப்பூதங்களின் துணைவலியால், விண்ணிற் சரிக்கும் மாருத* த்தையும் கொந்தித்தெழும் சமுத்திரத்தை

யுங்கூட தனது ஆக்ஞைவழி நடத்தவல்லனானான். நிற்க.

இவ்வாறு காலம் நடந்துவரா நிற்புழி, ஓர் சமயம் இலக்ஷ்மீகரன் தனது பணிபுரியும் தெய்வங்களைக்கூஉய், மிகப்பயங்கரமான வோர்பிரசண்டமாருதத்தை விளைத்து, அதனாற் கொந்தளிக்கும் கடலில் ஓர் மரக்கலம்* தத்தளித்து வருந்துவதைத் தனது புதல்வியாகிய மிரந்தைக்குக் காட்டினான். அவள் அதனைக் கண்ணுற்ற போழ்து கடலிலெழும் மலைகள்போன்ற அலைகள் அக்கப்பலை நொடிப்பொழுதில் பாதலத்தமுழ்த்தி விடுங்கொலோவென வச்சத்தை விளைத்தது. கப்பலுள்ளிருந்து அலமரும்* மாந்தரைத் தூரத்தே யிருந்து பார்த்து அவள் மனம் மிகத் துயருறும்போழ்தே அந்நாவாய்* திடீரெனக் கரைதட்டிச் சுக்கல் சுக்கலாகச் சிதறுண்டது போற் றோன்றிற்று. அத்தருணம் அதனுள்ளிருந்த யாத்திரா வாசிகளிடமிருந்து விளைந்த சோககோஷம் இவளது நெஞ்சத்தை மெலிவுறச் செய்தது. துக்கத்தால் மனந்தவித்து நின்ற மிரந்தை, அடங்காது மேன்மேலெழும் பிரசண்ட மாருதத்தால் மற்றும் மனம் வாடித் தனது தந்தையை நோக்கி, "எந்தாய்! தங்களது மந்திர சக்தியாலேயே, இக்கடல் கொந்தளித்து பீதியை விளைப்பது மெய்யாயின், தாங்களே அதனைச் சாந்த நிலைக்குத் திரும்பக் கொண்டுவரக் கூடுமன்றே! ஆகாசம் கன்னங் கரேலென நிற்பதை நோக்கின், அஃது உருகி நாற்றமெடுக்கும் கரித்தைல*மாக வருஷிக்குமோவெனத் தோன்றுநிற்கும். ஆயினும் சமுத்திரம் வரவர உயர்ந்து அண்டமுகட்டைத் தொடப்போவதை நோக்கின், இக்கேட்டிற்கெல்லாம் மூலகாரணமாய மின்னற்றீயைக் கண்டு

பிடித்து அவித்துவிட வெண்ணுவதுபோற் றேன்றுநின் றது. நிற்க.ஐயோ! கப்பலிலிருந்தார் துயருற்றுக் கடலுளா ழும்போழ்து என்னெஞ்சம் பட்டபாடு உரைக்கடங்குமோ! எனக்குமாத்திரம் அச்சமயம் தக்க ஆற்ற லிருந்திருக் குமேயாயின், அக்கப்பலே அதனுள் அலமந்து நின்ற மாந்தரோடு இக்கடல்கொள்ள சகித்திருப்பேனே! கடல் கப்பலைக் கொள்ளைகொள்ளும் முன்னம் அக்கருங் கடலையே பூமியின் பாதலத்தழுத்தி கேடு விளையாமற் காத்திருப்பேனே,! ஐயோ என் செய்வது!”

எனச் சோகக்கடலுளாழுந் தனது புதல்வியை ஆனந்த சாகரத்திலாழ்த்த வெண்ணங்கொண்டு நின்ற இலக்ஷ்மீகரன் அவளை யினிதுநோக்கி,

“குழந்தாய்! நீ யிவ்வாறு துயருறு நின்றாய்! மனத்தடுமாட்டமுறேல். திகிலையொழி. பரிவுறுநின்ற நின் இதயத்தை* நோக்கி ஓர் கேடும் உள்ளவா சம்ப விக்கவில்லை யெனக் கூறி அதனை மகிழ்வி” என்றான்.

தந்தை தனக்கு ஏதோ வீண்சமாதானஞ் செய்வதாக வெண்ணிய அவ்விளங்கன்னிகை மற்றும் பரிவுற்று, ‘ஐயோ, என்ன கெட்ட காலம்’ என்றாள்.

அப்போழ்து அவளது தந்தை மற்றுமவளை நோக்கி, ‘பெண்பாவாய்! ஒருவர்க்கேனுமோர் கேடும் விளைந்திலது. யான் இம்மகா மாயத்தை* விளைத்ததெல்லாங்கூடி, எனது ஏகபுத்திரியாகிய உனது க்ஷேமத்தை நன்கு கருதியே. நீயோ, உன்னைப்பற்றியேனும் என்னைப்பற்றி யேனும் உள்ளவா மெய்யொன்று மறிந்திலை. நான் எப் பதவியிலிருந்து,இவ்வடவிக்கு வந்தேனென்பதனையுமுணராய், நான் ஏதோ இலக்ஷ்மீகரனெனும் நாமத்தனென

வுனது தந்தை யெனவும், எனது சொத்தெல்லாங்கூடி காசுபெருத இக்குகை யொன்றே யெனவுமே எண்ணி யிருக்கின்ருய் போலும் ” என்ருன்.

மிரந்தை—ஆம், அப்படித்தான் எண்ணியிருந் தேன். நமது பூர்வநிலையை ஆழ்ந்துநோக்கி யாராய்தற்கு என் மனத்திலொரு கவலையும் இதுவரை முளைத்திலதே '

இலக்ஷ்மீகரன்—இதுவே நானுனக்கு நமது பூர்வ நிலையை விளக்குதற்கேற்ற காலம். நீ யுனது கையால் எனது மாந்தரீக அங்கியைக் களைந்து வேறு வை. [அங் கியைநோக்கி] மந்திரசக்தியே,நீ சிறிது அவணே யுறைதி. ஓ கண்மணி, துக்கத்தால் கண்ணீர் வடித்த முகத்தைத் துடைத்துக்கொண்டு, நான் சொல்வதை யுற்றுக்கேள். நீ மிகவும் மனம் நைந்துபோம் வண்ணம் நான் விளைவித்த மாயாவிசித்திரமான இக்கப்பற்கேடு வீண் மாயமே.அதன் கண்ணிருந்த மாந்தருள் ஒருவற்கேனும் ஓர் துரும்பளவு கெடுதியும் நேர்ந்திலது. ஆயினும் நீ கப்பலிலிருந்தார் யாவரும் மரணபயமுற்று அழுத கோஷத்தையுங் கேட் டாய், கப்பல் கடலுளாழ்ந்து முழுகிப்போவதையுங் கண் டாய். இது நிற்க. ஏ குழந்தாய், இப்போழ்துதான் மற்றை விஷயங்களையும் நீ யறிந்துகொள்ளவேண்டிய தருணம் வந்தது.

மிரந்தை—ஆமாம். இவ்வாறே தாங்கள் பல சமயங் களில் எனது பூர்வநிலையைச் சொல்வதாக வாயெடுத்து, நான் சொல்லுங்கள் எனப் பிரார்த்தித்த காலையும், ‘நில் நில்,இப்போழ்து தக்க காலமன்று’ என வென்னை வீணே கேள்விகேட்கவிட்டுப் பரிதவிக்க விட்டீர்கள்.

இலக்ஷ்மீகரன்—தக்க காலமன்றெனப் பன்முறை

யுனது வேண்டுகோளுக்கிணங்காது தவிக்கவிட்டது மெய்யே. ஆயின், இத்தருணமோ, உனக்கு யான் சகல இரகசியங்களையும் உடைத்துக் காட்டவேண்டிய அருமை யான வமயம். பாவாய்! நாம் இத்தீவிற்கு வருதற்கு முந்திய காலத்தைப்பற்றி ஏதேனுமுனக்கு ஞாபக முளதோ? நீ யெவ்வாறறிவாய்! அப்போழ்துனக்கு மூன்றுவயதுகூட முற்றுப்பெறவில்லையே!

மிரந்தை—ஏதோ ஞாபகம் உதயமாகாநின்றதே!

இலக்ஷ்மீகரன்—ஓகோ! அவ்வாறாயின் உனது ஞாபகம் எதனையொட்டி யெழாநின்றது? ஏதேனுமோர் வீட்டை யொட்டியோ அல்லது ஆளையொட்டியோ? உனக்கு ஏதேனு ஞாபகமிருக்குமாயின் அஃது என்ன ரூபமாயிருக்கின்றதென்பதனைக் கூறு, பார்ப்போம்.

மிரந்தை—எந்தாய்! எனது ஞாபகம் அதிதூரஞ் செல்லாநின்றது. தோன்றுவதும் எனக்கு நிச்சயம் போலல்லாது, ஏதோ கனாக்கண்டதுபோலிருக்கிறது. ஓர் காலத்தில், என்னை நாலைந்து செவிலித்தாயர் பராமரித்து நிற்கவில்லையா?

இலக்ஷ்மீகரன்—குழந்தாய்! ஆம், ஆம், உன்னைச் செவிலித்தாயர் போஷித்தது மெய்தான். நாலைந்துபேர் மட்டுமோ விருந்தனர்! உன்னை வளர்த்த மாதர் மற்றும் பலருளர். ஆ! இவ்விஷயம் மறைவுறாமல் உனது ஞாப கத்தி லிதுகாறு முறைந்தது பெரும் விந்தையே! மற்றும் ஆழ்ந்து நோக்கி பண்டைக்காலத்திய விஷயம் வேறே தேனும் உன் மனத்துட் டென்படுகின்றதோ, பாராய். இத் தீவிற்கு வருமுன் நிகழ்ந்தவோர் அனுபவத்தை மனத் துள் மறவாமற் கொண்ட நீ, ஓரோ வழி இத்தீவிற்கு

நாமிருவரும் வந்த விந்தையை மனத்தில் வைத்திருக்கக் கூடுமே, சொல், பார்ப்போம்.

மிரந்தை—அவ்ஞாபகம் ஒன்றும் என் மனத்துட் டென்படவில்லை.

இலக்ஷ்மீகரன்—ஏ, மிரந்தாய்! பன்னிரு வருடங் கட்கு முன்னர், உன் தந்தை மிலான் தேயத்து மன்னனாய் எவ்வளவோ பிரசித்தியோடு அதனை யாண்டு வந்தார்.

மிரந்தை—ஐயா! தாங்கள் எனது பிதாவல்லவோ?

இலக்ஷ்மீகரன்—ஆம், நானே யுனது பிதா. கற்பரசியாகிய வுனதன்னை யுன்னை யீன்றாள். எங்கள் வயிற்றில் பெண்கள் நாயகமாகிய நீ யொருத்தியே யுதித்தாய்.

மிரந்தை—நமது பூர்வ வாழ்வு இத்தகையதா? ஆயின் எவர்புரிந்த கபடங்காரணமாக நாம் மனுஷ சஞ்சாரமற்ற இத்தீவிற்கு வந்தோம்? அல்லையேல் நல்ல காலந் தானோ நம்மை இத்தீவிற்குக் கொண்டுவந்தது?

இலக்ஷ்மீகரன்—நீ கூறியவாறே, தீய காரணமும் நற்காரணமும் உள்ளன. ஒருவன் நமக்கிழைத்த பொல்லாங்கால் நாம் நாட்டைவிடும்படி நேர்ந்தது. நாம் செய்த புண்ணியத்தின் பலனாய் இந்தத் தெய்வீகமான தீவிற்கு வந்தோம். நமது கதி பழம் நழுவிப் பாலில் வீழ்ந்ததுபோலாயிற்று.

மிரந்தை—அச்சமயம் யான் எவ்வளவு துன்பத்திற்குத் தங்களை ஆளாக்கியிருப்பேனோ வென வெண்ணும்போதே என் மனம் நையாநின்றது. தயைபுரிந்து மேனடந்த விஷயங்களைக் கூறுக.

இலக்ஷ்மீகரன்--எனக்குத் தம்பியும் உனக்குச் சிற்

றப்பனுமான கீர்த்திசேனனென்பவன்—————.நன்ருய்க் கவனி, இத்தகைய படுபாவிப்பயலுமுண்டோ! இப்புவியில் எனதன்பிற்குரிய பொருள்களுள் உனக்கடுத்த ஸ்தானம் அவனதன்றே! உலகிலுள்ள மற்றப் பொருள்களிலும் அவனையே பெரிதாக மதித்த யான், எனது ராஜ்யபாரத்தை நடாத்தும் பொறுப்பையே அவனிடம் விட்டேன். சிற்றரசுகளிலெல்லாம் தலைநின்றது, மிலான் எனும் நமது நாடே, அதில் சகல கலைகளும் இனிது விளங்கின. நானோ மெய்ஞ்ஞானத்தைத் தெருட்டவல்ல* மறைகளைப் பயிலுவதில் மனம் வேரூன்றியதால், அரசியற்பாரத்தை அவன்பாற் சாற்றிவிட்டு அக்கவலேயோ சிறிதுமிலாது அரசியற்கு பராமுகமாயினேன். மோசக்காரப் பயலாகிய உனது சிற்றப்பனோ————.கவனித்துவருகின்ருயா?

மிரந்தை—வெகு கவனம்; மேற்செப்புக.

இலக்ஷ்மீகரன்—அரசியற்றந்திரங்களில் கைதேர்ந்தவனுகி, கிருபை பாலிக்கும் முறை, அதனை மறுக்கும் முறை, வேண்டியவனை உயர்த்தும் முறை, வேண்டாதானை கொட்டமடக்கி இறக்கும் முறை முதலியவற்றையெல்லாம் நன்கறிந்துகொண்டு தனது போக்குக்கிசைய நாடெல்லாம் ஒழுகும்படி செய்துகொண்டான். இம்மட்டோ. பால்மரத்தை புல்லுருவி முழுமுற்றுங் கவிந்துமூடி அதனது சத்தை உறிஞ்சித்தான் தழைத்து அதனைக் குடிகெடுப்பதுபோல் என் பலமுழுமையும் வாங்கிப் போட்டான். கவனிக்கின்ருயா.

மிரந்தை—ஐயோ, நன்ருய்க் கவனித்துக்கொண்டுதானே வருகின்றேன்.

இலக்ஷ்மீகரன்—நானோ, லௌகிக சுகங்களை முற்றும் நழுவவிட்டு பரம சாந்தியைநாடி, ஏகாந்த வாழ்க்கையைக் கைக்கொண்டேன். உடனே எனது தம்பி தீவினையின் வழிப்பட்டு தானே மிலான் மன்னனாகலாமென வெண்ணினான். நான் அவன்பாற் கொண்டிருந்த நம்பிக்கை எவ்வளவு அளவிறந்ததோ, அவ்வளவிற்கு அவனது துரோக சிந்தனையும் ஓங்கி வளர்ந்தது. பேராசையாலுந்தப்பட்ட அப்படுபாவிப்பயல்——————.கவனத்தோடு கேட்கின்றாயோ?

மிரந்தை—தங்கள் கதை செவிப்புலன் குன்றியவனையும் செவி திறந்திடுமே!

இலக்ஷ்மீகரன்—நான் ஒருவன் குறுக்கேயிருப்பதனையும் உனது சிற்றப்பன் பொறுக்கலாற்றானாயினன். அவன் என்ன செய்தும், மிலான் மன்னனெனும் பெயர் என்னைவிட் டகன்றிலது. ஆதலின், புத்தகமே அரசியற் செல்வத்தினும் மேம்பாடாய்த் தோற்றிய எற்கு, அரசன் எனும் பெயர்தான் ஏனோ வேண்டுமென வெண்ணங் கொண்டவனாய், புதுவை நகரரையனோடுறவாட வாரம்பித்தான். தானே மிலான் தேயத்திற்குத் தடையிலா மெய்ம் மன்னனாக வேண்டுமென வேக்கங்கொண்ட அப்பேய்ப் பயல், புதுவைநகர் மன்னற்குத் தான் கீழரசனாகிக் கப்பங் கட்ட சம்மதமுங்கொண்டான். அதுவரை வணங்கா முடி தரித்துவந்த மிலான் அரசை புதுவைநகர்க்கரசன் முன் முழந்தாளிடச் செய்தான். வணங்காமுடியும் வணங்குங் காலம் வந்ததே!

மிரந்தை—ஐயோ, தெய்வமே, அப்படியுமுண்டோ!

இலக்ஷ்மீகரன் — மற்றும் நடந்த விந்தையைக்

கேட்டு உனது சிற்றப்பனை எனது தம்பியென யான் மதிக்கக்கூடுமோ, காண்!

மிரந்தை—ஐயோ, குணவதியாகிய எனது பாட்டி யாரைப்பற்றித் தீங்கு நினைக்கவேண்டியதா யிருக்கின்றதே! அந்நல்லாள் எவ்வாறு இக்கொடியனை யீன்றாள்!

இலக்ஷ்மீகரன்—பேராசைகொண்ட பேய்ப்பயல், தம்பியெனச் சொல்ல நா கூசுகின்றது, நட்புக்கொண்ட புதுவை நகர்க்கரசன் யாரெனத் தெளிதி. அவன் எனக்குப் பழம் பகை. எனது உடன்பிறந்தானது வேண்டுகோளுக்கிசைந்து, அம்மன்னன் என்னை மிலான்நகரை விட்டோட்டுதற்குத் தான் அநுகூலமாய் நின்றான். என்னையோட்டிவிட்டு அப்படுபயலுக்குத் தடையிலா அரசவாழ்வைக் கொடுத்து மிலான்அரசனென பட்டாபிஷேகஞ் செய்விப்பதற்கு இணக்கங்கொண்டான். அதற்கிசைய, வென்னை நாட்டைவிட்டகற்ற வெண்ணங்கொண்டு ஓர் மோசப்படை யமையவே, படுதுரோகியாகிய எனது பின்றோன்றல்*, ஓர்நாள் இருட்படலங் கவிந்த நள்ளிரவில்[1] மிலான் நகரத்தின் கோட்டை வாசற்கதவைத் திறந்து வைத்தான். என்னை அப்புறப்படுத்தற்காக வேற்பட்ட துட்டர்கள் பேரிருளில் என்னையும் அழுதுகொண்டிருந்த நின்னையும் தள்ளிக்கொண்டு நமது கோட்டையினின்றும் வெளிக்கொண்டு வந்தனர்.

---

1 இவ்வாறு நள்ளிரவில் இலக்ஷ்மீகரனை யவனது குழந்தையோடு நாட்டைவிட் டகற்றியது அவன் தன்னை யவ்வாறு செய்தவ ரெவரென வறிந்துகொள்ளாமைப்பொருட்டு. பயிரங்கமாக இலக்ஷ்மீகரற்குத் தீங்கிழைக்க ஓர் படுபாவிக்கும் மனந்துணிந்திலதுபோலும். இதனால் இலக்ஷ்மீகரனது குணத்தின் பெருமை நன்கு விளங்காநின்றது.

மிரந்தை—ஐயோ, என்ன பாவம்! அப்போழ்தெவ்வாறு யான் தேம்பி அழுதேனே அறிகிலேன். இப்போது எனது கண்களில் உள்ளவா அழுகை வருகிறதே. அழுது காட்டட்டுமா?

இலக்ஷ்மீகரன்—கண்மணி! மற்றுஞ் சிறிது கேள். அப்போதே, இப்போது நான் முடிக்கக் கருதும் காரியத்தின் பொருத்தத்தைக் காண்பாய். நான் செப்பப் புகுந்த காரியத்தின் உள்ளீட்டை அறிதற்கன்றே உனக்கிதுகாறும் கதை கூறிவந்தேன்.

மிரந்தை—எந்தாய்! சரி; படுபாவிப் பயல்கள் நம்மை ஊரைவிட்டு அப்புறப்படுத்தும்போதே என் நம்மைக் கொல்லாது விடுத்தனர்?

இலக்ஷ்மீகரன் — எனதருங் கண்மணி! நன்கு உசாவினை. அவர்கள் துணிவு கொண்டிலர். நம்மேல் நமது நாட்டாருக்கிருந்த அன்பு அளவிடற்பாலதோ? அன்றியும் நமது எதிரிகளாகிய கன்னெஞ்சினர் நயவஞ்சகஞ்* செய்து நம்மை நாட்டைவிட்டு விரட்ட மனங் கொண்டாரேயன்றி, நேரிற் கொல்தற்குச் சிறிதஞ்சினர். நள்ளிரவில், நம்மை அவசரமாகக் கடற்கரைக்குத் தள்ளிக்கொண்டு வந்து, அவண் ஓர் சிறு கப்பலிலேற்றிக் கடலிற் சிறிது தூரம் இட்டுக்கொண்டு வந்தனர். பின்னர் பாயேனும், பாய்மரமேனும், கயிறுகளேனும் அமையாத ஓர் ஓட்டைப் படவில் நம்மை ஏற்றினர். அப்படவிலிருந்த எலிகளும், அஃது முழுகிவிடுமென்பதைத் தாமே யுணர்ந்து வெளிவர வாரம்பித்தன.[2] நேரே நம்மைக்

[2] 'முழுகிப்போம் கப்பலுள் எலிகள் தரித்திரா' வெனவோர் முதுமொழி வெள்ளைக்காரருக்குள் வழங்குவதுண்டு.

கொல்தற்குக் கூசிய பாவிகள் இவ்வாறு நம்மைக் கடற் கிரையாகும்படி அப்படவிலேற்றி கடலோடுகூடச் சேர்ந் தழவும் மாருதங்களோடு கலந்து பெருமூச்செறியவும் ஆளாக்கினர்.

மிரந்தை--அப்போழ்து தங்கட்கு யான் எத் தகைய பெரிய விடையூறு யிருந்திருப்பேனோ, அறிகி லேன்.

இலக்ஷ்மீகரன்—அல்லேயல்லே. காந்தர்வக் குழந் தை* யைப் பழித்த அழகினையுடைய நீ, அப்போழ்து தெய்வமாக நின்றென்னைக் காத்ததாகக் கருதாநின் றேன். புன்முறுவலால் என்னை அத்தருணம் நீ நோக் கியதை நினைப்பின், தெய்வமே உன் வடிவாய் நின்று என்னைத் தேற்றித் தைரியமூட்டி எனது சோகத்தைப் புறங்கண்டதென வெண்ண என்ன தடை! பாவமறியாத உனது புன்னகை யன்றே துக்கத்திலாழ்ந்து கண்ணீர் தாரைதாரையாய் விட்டு என்ன செய்வதெனத் தெளி யாது மயங்கித் தடுமாறிய வென்னை அஞ்ச*லென வழு தூட்டிற்று. பின்னரன்றே யான் வருவதெல்லாம் வருக, எத்துன்பம் வரினும் பொறுத்திருப்பேன், யாது நிகழும் பார்ப்போமென மனந்துணிந்தேன்.

மிரந்தை—அவ்வோட்டைப் படவிலிருந்த யாம் எவ்வாறு பிழைத்துக் கரைவந்து சேர்ந்தோமப்பா.

இலக்ஷ்மீகரன்—தெய்வமே துணைநின்று படவை யாழாது காத்து நம்மைக் கரை சேர்த்தது. அன்றியும், காஞ்சாலன் எனப் பெயரிய நற்குணத்தான், புதுவை நகரத்தான், ஓர் திருவாளன், நமக்கு வழிக்குச் சிறிது ஆகாரமும், நன்னீரும் வைத்திருந்தான். இதனுல்

யாம் கரையேறும்வரை பசிதாகங்களைப் புறங்கண்டோம். தெய்வாதீனமாய் அவனே நம்மை நாட்டைவிட்டுக் கடத்துதற்கு [3] அலஞ்சனால் நியமிக்கப்பட்டிருந்தான். தயாளரூபியாகிய அன்னோன் என்பால் மிகவும் பரிவெய்தி, யான் மந்திர சாத்திரங்களையே உயிர்த்துணையாகக் கொண்டு வாழ்ந்துவந்த ரகசியத்தை யறிந்து, அரசுரிமையினும் நான் பதின்மடங்கு மேம்பாடாகக்கொண்ட அந்நூல்களையும் உடன்கொண்டு வந்து நம்மைப் படவிலேற்றும்போழ்து அவற்றை எனக்குக் கொடுத்தான். தெய்வம் நம்மைச் சாகவிடாது காக்குமென அவன் எண்ணியேயிருந்தான்போலும். அல்லையேல் நமக்கு ஆகாரந்தான் எற்றிற்கு! தண்ணீர்தான் எற்றிற்கு! இந்நூல்கடானெற்றிற்கு! அன்றியும் நமது மானத்தை நன்கு காத்தற்காகவும் குளிர் முதலியவற்றைத் தாங்கவும் இன்றியமையாதனவான வஸ்திரங்களையும் அவன் நமக்காகப் படவில் வைத்திருந்தான்.

மிரந்தை—அத்தகைய வருளாளனை எப்போழ்து காண்பேனோ! காணத்தான் கிடைக்குமோ!

இலக்ஷ்மீகரன்—நமது நல்ல லக்கினம் வராநின்றது. யான் எழுந்து பணி தொடங்கவேண்டும்.

[எனச் சோல்லிக்கோண்டே தனது மந்திர வுடையைத் தரித்துக்கோண்டு தனது அரும்புதல்வியை நோக்கிப் பின்னரும் கூறுவான்]

---

[3] காஞ்சாலன் அருளாளனாயினும் தனது அரசனது கட்டளையை மறுத்தற்கஞ்சி, இலக்ஷ்மீகரனை நாட்டைவிட்டகற்றக் கருவியாயிருந்தானாயினும் தனது அருளால் அவற்குத் தன்னாலியன்ற உதவியை மறைவாய்ப் புரிந்தான் எனக்கொள்க.

நீ எழவேண்டாம், உட்கார்ந்திருந்துகொண்டே நமக்குற்ற துக்கத்தின் இறுதியைக்கேள். கடைசியாக யாம் இத்தீவிற்கு வந்தோம். இவண் நானே உனக்கு ஆசிரியனுகவிருந்து அரசிளங்குமரர்கட்கும் எளிதிற் கிட்டாத கலைகளையெல்லாம் பயிற்றுவித்தேன்.

மிரந்தை—தாங்கள் அடியாட்குப் புரிந்த பேருதவிக்குக் கடவுள் தக்கபடி தங்கட்குப் பரிசளிக்கக்கடவர். அஃதெல்லாம் நிற்க, தாங்கள் யாது காரணத்தால் மாயா விசித்திரமான இச்சண்டமாருதத்தை விளைத்தீர்களென்பதை யறிதற்கு என் மனம் இன்னந் துடித்துக்கொண்டேயிருக்கின்றது!

இலக்ஷ்மீகரன்—நான் காரியத்தைச்சுருங்க வுரைப்பேன் கேள். எனது நற்பாக்கியம், எவரும் எதிர்பாரா வண்ணம் எனது எதிரிகளையெல்லாம் இப்போழ்து இத்தீவின் கரை கொண்டுவந்து சேர்த்து என் கைவசமாக்கியது. எனது ஞானதிருஷ்டியால் யான் நோக்குங்கால், எனது பாக்கியம் ஓர் சுபநக்ஷத்திரத்தையொட்டி நிற்கின்றது. அதனுல் விளைபலனை யான் இத்தருணம் கிரகிக்கத் தவறுவேனுயின், எனது பாக்கியம் இனி வளராது எப்போழ்தும் குறுகிக்கொண்டே போம். இனிச் சிறிது பேச்சை நிறுத்து. உனக்கும் தூக்கம் வருவதுபோற் றேன்றுகின்றது. ஆனந்தமயமான அதனைக் கெடுக்காது அதற்கிணங்கிக் கண்வளர்தல் நலம். நித்திரை கொள்தி,

எனச் செப்பித் தனது மாத்திரைக்கோலால் அவளைத் தொடுதலுமே மிரந்தை தன்னை மறந்து நித்திரை கொண்டாள்.

அச்சமயம், இலக்ஷ்மீகரன், முன்னரே தான் பணிக்

கண் ஏவியிருந்த ஆரியை தூரத்தே வருவதைக் கண்டு அதனைக் கூவி 'வருக வருக' வென்றான். மந்திரயோகி* தனது புதல்வியை நித்திரைகொள்ள வைத்ததும் தான் ஆரியையோடு பேசுதற்கே ஆரியை மிரந்தையது கண்ணிற் றென்படாத அருவமேனியுடனிருப்பினும், தனது பிதா ஏதோ சூனிய*த்தோடு பேசுகிறாரே என வச்சங்கொள்ளாதிருத்தற்பொருட்டே, தந்தை தனது புதல்வியை மாத்திரைக்கோலாற் றூங்க வைத்ததூஉம்.

கூவியவுடனே இலக்ஷ்மீகரனைக் கிட்டிய ஆரியை, "பிரபு, இதோ வந்தேன்; தாங்கள் சித்தமிடுங் கட்டளை யாதாயினும் அதனைச் சிரமேற்கொண்டு முடிப்பேன். ஆகாயத்திற் பறக்கவேண்டுமோ! தண்ணீரிற் குளிக்கவேண்டுமோ! நெருப்பிற் பாய்ந்து செல்லவேண்டுமோ! சுருண்ட மேகத்தை ஊர்ந்து நடாத்தவேண்டுமோ! யாதாயினும் சரி, அடியாளும் எனதினத்தாராகிய மற்றைய தெய்வங்களும்[1] தாங்களிடும் பணியை முட்டின்றி முடிக்கக் காத்திராநின்றோம்," என்றாள். உடனே இலக்ஷ்மீகரன் ஆரியையை நோக்கி, 'ஏ தேவதாய்! யான் உனக்கிட்ட ஆக்ஞைப்படி அனுப்பிசகாது சண்ட மாருதத்தை விளைத்து எனது பணியை முடித்தனையா?' வென்றான்.

ஆரியை—தாங்களிட்ட கட்டளைகளொவ்வொன்றும் எள்ளளவும் தவறாது மிகக் கவனத்துடன் முடிந்தது. சிறிது விவரிக்கின்றேன் கேண்மோ. யான் கப்பலைக்

---

[1] இவ்வாறே ஓர் பூதம் ஓர் விளக்கைத் தேய்க்கும் போழ்து பிரத்தியக்ஷமாகி அலாதீனை நோக்கி 'நானும் எனது இனத்தாராகிய இவ்விளக்கிலுள்ள மற்றைத் தெய்வங்களும் உனது குற்றேவலைப் புரிவோம்' என்றது.

குபீரெனச் சென்று தாக்கினேன். மின்னற்சுடர் வடிவாகிக் கப்பல் முகத்திற் பிரகாசித்தேன்; பின்னர் அதனது நுசிப்பி*னின்று ஒளி வீசினேன். பின்னர் கப்பற்றட்டினின்றிலங்கினேன்; பின்னர் நாவாயின் அறைகளொவ்வொன்றினுள்ளும் புகுந்து ஆச்சரியத்தை விளைவித்தேன். அதன்பின், வேறோர்விதமாக மாந்தரை மருட்டக்கருதி ஏகஜோதி ரூபியாயிருந்த யான் பற்பல ஒளித்துண்டங்களாக மாறி ஏககாலத்தில் பற்பலவிடத்தில் அனலாய் எரிந்துகொண்டு நின்றேன். பாய்மரத்திலும், பாய்களிலும்,மற்றையிடத்தும் பல்லுருக்கொண்டு நின்ற யான் திடீரென வொன்றுகூடி ஓர் ஜோதிப்பிளம்பாய்*த் தோன்றினேன். வயிரப்படையாளன்*விளைக்கும் பேரிடிகளின் முன்னர் தோன்றுநின்ற மின்னல்களும் எனது வேகத்தை மிஞ்சமாட்டா. யான், மின்னலுருக்கொடு இடியிடித்து கடலை அல்லோல கல்லோலப்படுத்திய போழ்து, திரிசூலப்படை யேந்திய வருணனும் நடுக்கமுற்றான்.

இலக்ஷ்மீகரன்—இவ்வாறு நீ பணி புரிந்திருப்பையாயின் கப்பலிலிருந்த எவனே தனது அறிவு மயங்காதிருந்திருப்பன்!

ஆரியை—அவர்கள் பட்டபாட்டைச் சொல்லவோ! யான் விளைத்த தடபுடலால் கப்பற்கண்ணிருந்தார் யாவரும் அறிவு கலங்கிப் பித்தராயினர். தீ வடிவாய் நின்ற எனது மாயவிஞ்சையால் நாவாய் நெருப்புப்பற்றி ஏகமாய் எரிந்துகொண்டிருப்பதுபோற் றோன்றவே அதனுள்ளிருக்க ஒருவருக்கும் மனந்துணிவுறாது யாவரும் கடலிற் குதித்திறக்கப் பார்த்தனர். அவருள் முதற்கண்

*அம்புதியிற் குதித்தவன் புதுவைநகர் அரசிளங் குமாரனாகிய பரிதனனே. தனது குமாரன் கடலில் வீழ்வதைக் கண்ணுற்ற அவனது பிதா தனது புதல்வன் கடலிற் கிரையாய்விட்டதாகவே பாவித்துத் துக்கத்திலாழ்ந்தான்.

இலக்ஷ்மீகரன்—பேஷ், பேஷ்; இராஜகுமாரன் குதித்தவிடம் கடற்கரை யருகேதானே.

ஆரியை—கரையோரமே.

இலக்ஷ்மீகரன்—ஒருவற்கும் ஏதம்* நேர்ந்திருக்க மாட்டாதன்றே! எல்லாரும் க்ஷேமந்தானே!

ஆரியை—மயிரளவும் ஒருவற்கும் உள்ளவா துன்பம் நேரிட்டிலது. திகிலுக் காளாயினாரேயன்றி உள்ளபடி வருத்தமுற்றவன் ஒருவனுங் கிடையாது. கடலிற் குதித்து வெளியேறி கரை சேர்ந்தவர்களது உடைகளோ, ஓர் சிறிதும் நனைந்தில. கடலிற் றோய்ந்தபின் அவ்வுடைகள் முன்னினும் புதிதாய் அழகுடன் விளங்கின. தாங்கள் அடியாட்குக் கட்டளையிட்டவண்ணம் மாந்தரை ஒன்றுகூட விடாது அவரவரைப் பிரித்துப் பற்பல விடங்களி லமரும்படி செய்தேன்.

இலக்ஷ்மீகரன்—அவ்வாறாயின், அரசிளந்தோன்றலாகிய பரிதனனை எவண் உய்த்தனை?

ஆரியை—அவனை நானே கரைசேர்த்தேன்; அவனோ இத்தீவில் ஓர் மூலையில் தனது கரங்களை இவ்வாறு கட்டிக்கொண்டு [5] தனது தகப்பன் கடலிலாழ்ந்து இறந்துவிட்டதாகச் சோகத்தோடு மனம் வாடியிருக்கின்றான்.

இலக்ஷ்மீகரன்—அவனைக் கடிதில் இவண்

---

[5] இவ்வாறு கூறும்போழ்தே ஆரியை தனது கைகளைக் குளிர்க்காற்றுதகட்டிக்கொள்வார்போற் கட்டிக் காட்டினள்.

கொணர்தி ; எனது புதல்வி அந்த யௌவன புருஷனைக் கண்ணுறவேண்டும். அரசன் கதியென்ன ? எனது தம்பி கதியென்ன ?

ஆரியை—அவர்களும், தாங்கள் மிகவும் கொண்டாடும் குணவானான காஞ்சாலனும், இராஜகுமாரன் எவனுளானெனத் தேடாநின்றனர். மற்றவருள்ளும் ஒருவனும் தப்பிப்போகவில்லை. ஒவ்வொருவனும் தானே தப்பிப்பிழைத்ததாகவும் மற்றையோர் கடலிற்கிரையானதாகவும் மனப்பால் குடிக்கின்றான்.*

இலக்ஷ்மீகரன்—இட்டபணியை மிகவும் கவனமாய் முடித்தனை. சந்தோஷம். ஆயினும் மற்றுஞ் சிறிது பணி உன்னால் முடியவேண்டியதுளது.

ஆரியை—இன்னம் வேறு பணியுமுளதோ ? ஐய, தாங்கள் என்னைக் கடிதில் விடுதலைசெய்து விடுவதாக வாக்களித்திருக்கின்றீர்கள். அதனை ஞாபகப்படுத்துகிறேன். யான் தாங்கள் உகக்கும்வண்ணம் எல்லாப் பணிகளும் முடித்தவள். தங்கட்குப் பொய் ஒருபோதும் சொன்னவளல்லள் ; தங்களது பணிமுடிப்பதில் அணுவும் பிசகினவளல்லள். எப்பணியையும் முனங்காதும் மனங்கோணாதும் முடித்து இதுவரை தங்களை மகிழ்வித்தவளென்பதை யறிக்கையிடாநின்றேன்.

இலக்ஷ்மீகரன்—எது, காரியம் கெட்டுப் போனாற்போற் றோன்றுகின்றது. இவ்வளவு தைரியமா?எத்தகைய இடுக்கணினின்றுன்னை விடுவித்துக் காப்பாற்றினேன் என்பதை மறந்தனைபோலும். ஜலமேல் நடத்தலும், காற்றேடோடுதலும், பூமியின் அகட்டிற்* சென்று சிறிது பணி முடிப்பதும், நீ யெனக்குச் செய்யும் பேருபகா

மென நினைக்கின்ருயோ ? நீலக்கண் முண்டையாகிய சிக்க ராக்கியை மறந்தாயோ ? அத்துட்டை புரிந்த பில்லிசூனி ய*க்கேடுகளை மாந்தர் செவியுறவும் பயப்படுவர். அக்கொடி யளை அவளது தீச்செயல்கட்காகத் தேசத்தைவிட்டு விரட்டவே அவள் தனது குட்டியோடு இத்தீவிற் குற் ருள். அக்காலம் நீ யவட்குப் பணிவிடை புரிந்து அவட் கடிமையா யிருக்கவில்லையா ? அவள் ஓர்கால் உன் மனத் திற்குப் பிடிக்காத சிலதுஷ்டச் செயல்களை முடிக்கும்படி யுன்னை யேவியபோழ்து நீ மாட்டேனென மறுத்ததால் அவட்கு அடங்காக்கோபம் பிறந்து தன்பாலிருந்த சில பூதங்களின் பெரும் சக்தியால் ஓர் தேவதாரு விருக்ஷத் தைப் பிளக்கச்செய்து அதன்கண் உன்னை யுயிரோடு மாட்டி உன்னைக் கதறவிட்டதனையும் மறந்தாயோ ?

ஆரியை—மறக்கவில்லை.

இலக்ஷ்மீகரன்—நீ துன்பம் பொறுக்கலாற்ருது அரற்றியபோழ்து உன்னை விடுவிக்கும் ஆற்றலின்றி அவள் உன்னை அப்படியே விட்டுவிடவே, நீ பன்னிருவரு ஷம் மரச்சந்திற் பிடியுண்டு நித்தியகண்டம் பூரண ஆயுள் என்றவண்ணம் காலத்தை யோட்டி வந்தாய். நீ கதறிய சப்தத்தால் காடிகளும் ஓநாய்களும் மனம் நடுங்கி புத்தி திரிந்து வனத்தில் மயங்கி யுழன்றனவன்றே! பின் னர் சிக்கராக்கியும் செத்துப்போகவே, விமோசனகதி கிடையாதென மனந்தடுமாறிக் கிடந்தாயன்றே ! இவ ணுற்றபோழ்து நானல்லவோ உனது பரிதாப நிலைக் கிரங்கி ஈசன் கிருபையா லெனக்கிருக்கும் அபார மந்திர சக்தியால் அம்மரத்தைத் திரும்பப் பிளக்கச்செய்து உன் னைப் பந்தத்தினின்றும் விடுவித்தேன். ஏதேனு முனக்கு

வையேல் அதனினும் பலங்கொண்ட கருங்காலி மாத்தைப் பிளக்கச்செய்து அதன்கண் உன்னை மாட்டி மற்றும் பன்னிரு வருஷம் சிறைப்படுத்த வல்லேன்!

ஆரியை—தயைசெய்து அடியாளை மன்னிக்கவேண்டும். இனி நான் தாங்களிடுங்கட்டளையை முடிப்பேனேயன்றிச் சுதந்தரத்தைக் கேட்பேனல்லேன். தங்கள் சித்தமே எனது பாக்கியம்.

இலக்ஷ்மீகரன்—எனதினிய பூதமே! நான் செப்பும் பணியை முடி. உன்னை இரண்டே நாளில் விட்டுவிடுகிறேன்.[6]

ஆரியை—நல்ல பாக்கியம் பெற்றேன், பிரபு. தாங்களிடும் பணி யாது? உடனே கட்டளையிடுக. கடிதிற் செய்து முடிக்கிறேன்.

இலக்ஷ்மீகரன்—நீ ஓர் அப்சர ஸ்திரீயாக வுருமாறிக் கடிதிலிவண் வருதி, செல்.

இவ்வாறு கூறவே, ஆரியை மறைந்தாள். இலக்ஷ்மீகரன் உடனே தனது புதல்வியாகிய மிரந்தையை துயிலெழுப்பவே அவள், "தாங்கள் கூறிய நமது பூர்வகதையைக் கேட்டு மனம் அதனுள் அழுந்தவே தூக்கத்தாற் பிடியுண்டு நித்திரை போனேன்" என்றாள். தனது தந்தை அவளை நோக்கி, "நாம் நமது கலியன் என்ன செய்கின்றானென்பதைப் பார்த்து வருவோம், வா" வென்றான். "அக்குரங்கனைப் பார்ப்பதென்றால் என் மனம்

---

[6] இலக்ஷ்மீகரன் ஆரியையைப் பயமுறுத்தினனேயன்றி உள்ளபடி அதனைப் பந்தத்தினின்று விலக்கச் சித்தமாக விருந்தான்.

வெறுப்பைக் காட்டுகின்றது" என்றாள் பிரந்தை. தந்தை யவளை நோக்கி, "எத்தகைய துட்டனாயினும், அவனாலேயே நமது வீட்டுப்பணிகள் முடிவுறவேண்டி யிருக்கின்றன. போவோம், வா" வென வழைத்துக்கொண்டு சென்றான்.

கலியனது பணிகளை மேற்பார்த்து அவனைக் கண்டித்துக்கொண்டிருக்கும்போழ்தே, ஆரியை நீராமகள் வடிவாய் பிரந்தை கண்ணிற் கெட்டாது இலக்ஷ்மீகரனை யடுக்கவே, அவன் மகிழ்ந்து அவளைப் பரிதனனை யிட்டு வரும்படி பணிமேலனுப்பினான். பின்னர் சிறிது நேரத்தில் ஆரியை ஆகாசவீதியில் அதியற்புதமான கானமொன்றைப் பாடிக்கொண்டே மேலே பறந்துவர, அவ்விசையாலிழுக்கப்பட்ட பரிதனன் தனது துக்கத்தையுங் கைவிட்டுத் தூரத்தே யோடிவராநின்றான். அவ்வாறு வரும்போழ்தே அவன் சொல்கிறான்,—

இந்தக் கானம் எவணிருந்துவரா நின்றது? விண்ணிலிருந்தோ? அல்லேயேல் மண்ணிலிருந்தோ? ஐயோ நின்றுவிட்டதே! இஃது இவ்வனத்தாசியாகிய வனதேவதை பிரியமுறுமாறு காந்தருவர்எழுப்பும் இசைபோலும். ஓர் மேட்டிலிருந்து எனது தந்தையின் கதியை நினைத்துத் துக்கமுற்று நின்றேனை, மெல்லென கடலினின்றெழுந்து எனது செவிபுட் புகுந்து ஆனந்தம் விளைக்கவே, கடலும் சாந்தநிலை யடைந்தது; எனது சோகமும் அகன்றது. நானே அவ்விசையைக் கேட்டுப் பின்றொடர்ந்து வந்தேனோ? அவ்விசையே என்னை நானறியாதே யிழுத்துக்கொண்டு வந்ததோ? தெரிகிலேன். ஐயோ அத்தெய்வ கானம் ஒய்ந்துபோயதே—.

இதோ மற்றும் திவ்வியநாத மிசையாநின்றது, ஏதோ சொல்கின்றதே யுற்றுக்கேட்பேன்,—

ஆரியைபாடுகின்ருள்.

உந்தை*கடற்குளே ஐந்தாட்பரிசத்துள் ஆழ்ந்துகிடக்கிருன் !
அன்னவன்என்போ பவளங்களாக வுருவந்திரிந்தன.

முன்னமவற்குக் கண்ணுயிருந்தன முத்தங்களாயின !
அன்னவனங்கம் ஒன்றுமேகூட வீண்போயதேயன்று !

அங்கமொவ்வொன்றும் விஞேதவுருக்கொடு விலையாலுயர்ந்து
ஏதோகடற்குரி பொருளாகமாறி உறைதாாநின்றது !

நீரரமகளிர் காலந்தவருது மணியடித்தவற்கு
ஒப்பாரிபாடி முத்தமுகுக்கிருர்—இதோ,

இப்போழ்துங்கூட அதோஒ மணித்தொனி
டிங்ங் டிங்ங் கெனச்சப்திக் கின்றதுபாராய்.

பரிதனன்—இக்கானம் கடலில் மூழ்கிப்போன எந்தையை மனதிற்குத் திரும்பக் கொண்டுவராநின்றதே. இஃது மனுஷகானமன்று, பூலோக கானமுமன்று, விண்ணில் எனக்கு நேரே மேலே இசையாநின்றது.

இவ்வாறு மாயா கானத்தால் இழுக்கப்பெற்று பரிதனன் ஓடிவாாநிற்ப, இலக்ஷ்மீகான் தன்னருகே நின்ற மங்கையை நோக்கி, “ அம்மணி, உனது நேத்திரத்தை எறிட்டு அதோ தூரத்தே வருவதைக்காண் ; அஃது யாது ?” எனக் கூறினன். நரைமீதூர்ந்த தாடிவாய்ந்த தனது தந்தையைப் போலவே மனுஷர்குழா மெவரு மிருப்பார்களென வெண்ணமுற்றிருந்த மிரந்தை, அரசிளந்தோன்றலது ரமணீயமான முகத்தைக் கண்ணுறவே அவனை மனுஷனெனக் கருதாளாய்த் தனது தந்தையை நோக்கி, அஃதென்ன? ஓர் புத்தேளன்றே*! அஃது

நோக்காநின்ற நிலையைப் பார்த்ீர்களோ! உள்ளவா மிகக் கம்பீரமுடைய தேவாய்த் தோன்றுநின்றது. தேவனென் பதற் கையமுண்டுகொல்,' என்றனள். அதற்கு இலக்ஷ்மீ கரன், ' அவ்வாறன்று ; அஃது, நாமெப்படி உண்டுறங்கு வோமோ அப்படியே செய்வது. நமக்குச் செவி கண் முதலாய பொறிக ளெவ்வாறமைந்தனவோ அவ்வாறே யதற்கு முள்ளன. தேவனல்லன், நரனே.* இவ்வீரன் கப்பல், சிதறுண்டு நீரிலாழுங்காலை யதன்கண்ணிருந் தான். அழகைக்கெடுக்கும் பெற்றியதான சோகத்தால் மொத்துண்டு சிறிது அழகு குன்றினன். அல்லையேல் மற்றும் சுந்தரனுக விருப்பன். தன்னுடன்போந்தாரை யிழந்து அவர்களை நாடி அலைகின்றான்போலும்' என்றான். அதற்கு மிரந்தை,'இவர் எற்கு*தெய்வமென்றே தோன்று நின்றார். புவியிலுற்பவித்த எப்பிராணியுள்ளும் இத் தகைய வனப்பை யான் இதுவரை கண்டதுண்டோ வென வவள் கூறுங்கால், தகப்பன், ' காதல் நான் நினைத் தாங்கு உதயமாகாநின்ற' தெனத் தனக்குட் சொல்லிக் கொண்டே, ஆரியை நோக்கி, ' நீ புரிந்த இவ்வரிய உபகா ரத்திற்குப் பரிசாக இரண்டே நாளிற் சுதந்தர வாழ்வை யுனக்குத் தருவேன்' என்றான்.

பரிதனனே, அவ்வடிவழகி மனுஷ சஞ்சாரமற்ற அவ்வனத்தே காணப்பட்டதாலும், தான் இதுவரை செவியாற் பருகிய தேவகானத்தாலும், தெய்வீகங்களை யன்றி வேறொன்றும் அவண் காணுதற் கியலாதென வெண்ணி, அத்தீவு முழுமையுமே விஞ்சைவயப்பட்டு மூழ்கிக் கிடக்கின்றதெனத் திண்ணமேறிய நெஞ்சத் தனுப், தான் மிரந்தையைக் கண்டக்காலும் அவளை அவ்

வனத்தின் அதிதேவதை யெனவே மருட்சிகொண்டு அவளை நோக்கி மிகப் பயபக்தியோடு, ‘ அம்பிகே! தயை புரிந்து அடியேன் செய்யும் விண்ணப்பத்தைச் செவி யேற்க. தாம் வாழ்வது இத்தீவந்தானே? அவ்வாறாயின் திசைதப்பித் தியங்காநிற்கும் பேதையேன் தெய்வீகமான இவ்வனத்திலெவ்வாறு நடந்துகொண்டால் ஏதம் விளை யாது உயிர்காக்கக் கூடுமென்பதற்குச் சித்தம் களிகூர்ந்து உத்தாவளிக்க வேண்டும். ஆயினும் நான் முதல் முதல் தம்மைக் குறையிரந்துதெரிந்துகொள்ள வேண்டியதொன் றுளது; நேத்திரோத்சவங்*கொடுக்காநின்ற எனது அற் புத வாழ்வே! நீ மண்ணுலக நங்கையோ வேறோ? அத னையே முதற்கண் செப்புதி’ யெனப் பணிந்தான்.

காதல் ஓர்பக்கமுண்டெழ, நாணமோர்பக்கம் நாவை யடக்க, மிரந்தை சிறிது தைரியத்தை வகித்துத் தான் அணங்*கல்லள், மண்ணுலகப்பெண்ணே யென வவற்கெ டுத்துரைத்துத் தனது வரலாற்றை மற்றுமவற்கு விரிக் கப்புகுங்கால், இலக்ஷ்மீகரன், அவர்கள் முதற்காட்சியி லேயே பரஸ்பரம் காதல்கொண்டமையாற் கழிபேருவகை யெய்தினனாயினும், ஓர் அரும்பொருள் எளிதிற் கிட்டின் அதன் மகிமை நன்கு விளங்காது அலக்ஷியம் ஓரோ வழி நேருமெனக் கருதிப் பரிதனனது காதற்றிறத்தை மற்றும் ஆழம் பார்க்க எண்ணி அவனை நோக்கி,‘ நீ யோர் கள்ளன், நான் வசிக்கும் இத்தீவைக் கவர் தற்காக இரகசியமாக இதற்கு வந்திருக்கிறாய்; உன்னை எளிதில் விடேன். கூடவே வா; உனது கால்களைக் கழுத்தோடு கட்டி உன்னைப் பந்தப்படுத்துவேன்; கடல் நீரையே பருகத் தருவேன், நத்தையும் வதங்

கிய கிழங்கும் உமித்தவிடுமே உனக்காகாரமாம்' என உறுக்கினுன். பரிதனனே, 'அப்படியா, நான் அவ் வாறு செய்யவொட்டேன். நீர் அத்தகைய பலமுள்ள வரோ பார்ப்போ'மெனத் தனது கட்கத்தை உருவினுன். இலக்ஷ்மீகான் தனது மாத்திரைக்கோலைச் சிறிது உயர்த் தவே பரிதனன் தனது நின்றநிலை பெயரமாட்டாது வலியற்று நின்றுன். தனது காதலற்குற்ற இடுக்கணைக் கண்டு மனம் நொந்த மிரந்தை தனது தந்தையை நெருங் கச் கிட்டி யொட்டி நின்று, 'ஐய, தாங்கள் ஏது இவ் வளவு தூரம் அன்பு குறைந்து நிற்பது? சிறிது இரக் கங்கொள்க. இவர் கெட்டவரல்ல ரென்பதற்கு நானே பிணை. நான் புவியிற்கண்ட ஆடவருள் இவர் இரண்டாமவர். என் மனத்தை எனக்குத் தெரியாதே யோர் அன்பாற் பிணித்து என்னைத் தன்பாலீடுபடச் செய்யுமிவர்பால் தங்கட்குக் கிருபை வேண்டாமோ?' வென்றுள். தந்தை யுள்ளுக்குள் மகிழ்ந்து அதனைவெ ளிக்காட்டாது அவளை நோக்கி, 'வாயை மூடு; அவனுக் காகப் பரிந்து மற்றுமோர்தரம் பேச வாய் திறப்பையேல், பேதாய், உன்னை மிகவும் கடிவேன். மோசக்காரப்பயலுக் குப் பரிந்துபேச நீயோர் ஆளோ! இவனையும் கலியனை யுமே இதுவரை கண்டிருப்பவளாதலின், இவனையன்றி வேறே வனப்புடையார் ஒருவருமிலரென வெண்ணுகின் ருய்போலும். அறிவிலாய், இவன் கலியனினும் எத் துணை சுந்தரனுகத் தோன்றுகின்றுனே, அவ்வாறே இவ னினும் இனிய வதனத்தர் * உலகத்திலுளர்' என்றுன். தந்தை யிவ்வாறு கூறியது, தனது மகளது காதல் இம் மொழிகளால் நிலைகுலையாது ஒருபடித்தாயிருக்கின்றதா

வென்பதனை யறியும்பொருட்டே. அப்போழ்து பெண்கள் நாயகம் தனது பிதாவை நோக்கி, 'இவர் எனக்குப் போதும், இவரினும் மிக்க வனப்புடையாரிருப்பினும் அவர்களை நோக்க என்மன மிணங்காது' என விடை கூறினள். இம்மொழிகளைக் கேட்ட பரிதனன் மனம் ஆனந்தத்தழுந்தியது.

இலக்ஷ்மீகரனே பரிதனனை நோக்கி, 'நீ எனது ஆக்ஞையை மீறவல்லாயல்லை. நானிடும் வேலைகளைச் செய்தற்பாலை, கூடவா' வெனவே, பரிதனன் எவ்வளவோ அதனை மீறி வாளாவிருக்கப் பிரியமுற்றும், தனது தேகம் இலக்ஷ்மீகரனிடும் கட்டளைகளை நிறைவேற்ற அவனது வயப்பட்டு அவன்பின் போவதைக் கண்டு மிகவும் வியப்புற்றான். ஆயினும் போம்போழ்தே திரும்பித் திரும்பி மிரந்தையை நோக்கிக்கொண்டே வழிநடந்து செல்பவன் தனக்குட் கூறுநின்றான்: 'ஏதோ சொற்பனங் காண்பவன் சுதந்தர அறிவின்வழி நடவாது மாயை வசப்பட் டொழுகுவதுபோல் எனது சக்திகள் யாவும் பந்தமுற்று என்வழி நில்லாவாயின. வேண்டுமாயின் இவர் என்னை எவ்வளவு பயமுறுத்தினும் உறுத்துக; தன்வயமிழந்து நான் பாதந்திர *ஞயினும் அதனையும் ஒருவாறு சகித்திருப்பேன். எனக்கு வேண்டியதெல்லாங் கூடி இவளது தரிசனமே. தினம் ஒரு முறை இத்தெய்வப்பெண்ணை நான் சிறையிருந்தவாறே தரிசிக்கக் கிடைக்கினும் எனது பாக்கியம் மிகவும் மேலதே'

இவ்வாறு கூறிக்கொண்டே பரிதனன் மலைக்குகைக்குள் இலக்ஷ்மிகரனெடு சென்றான்.

ஆயினும் இலக்ஷ்மீகரன் பரிதனனை நெடுநேரம் பங்கத்தில் வைக்காது வெளிக்கொண்டு வந்து ஓர் கஷ்டமான பணிவிடையைச் செய்யக் கட்டளையிட்டான். மிரந்தையும் தனது காதலற்குற்ற கஷ்டத்தை யுணர்ந்தாள். இலக்ஷ்மீகரனோ தான் தனது வித்யாமண்டப*த்துட் சென்றிருக்கப் போவதாய்க் கூறித் தான் திரும்ப வருமுன்னர் தான் இட்ட பணி முடியவேண்டுமெனப் பரிதனனுக்கு வற்புறுத்திவிட்டு உட்செல்வதுபோற் பாசாங்கு செய்து அருவ*மாய் நின்று அக்காதலர்களது ஒழுக்கத்தைக் காண்பானுயினன்.

மிகப் பளுவான மரக்கட்டைகளை ஒன்று சேர்த்து குவிக்கும்படி ஏவப்பட்ட அரசிளந்தோன்றல் அதற்கு முன் அத்தகைய சிரமமான தொழிலை எக்காலத்தும் புரிந்தவனல்லனுதலின் மிகவும் ஆயசத்தோடு அத்தொழிலை நிறைவேற்றிக்கொண்டிருக்குங்கால் மிரந்தை அவண் வந்து தனது காதலன் உறும் கஷ்டத்தை நோக்கி, 'இவ்வளவு சிரமமாகப் பணிவிடையை ஏன் புரிதல் வேண்டும்! எனது தந்தையோ வித்தியா மண்டபத்துள்ளிருந்து நூல்களை வாசியாநின்றார். இன்னம் ஒரு ஜாமம்வரை வெளிவரார். ஆதலின் தக்கவாறு தாங்கள் சிரமந்தீரலா' மென்றனள்.

அதற்குப் பரிதனன் 'இன்பந்தரு குயிலே, நான் அவரது கட்டளையை முடிக்காதிருக்க அச்சமுறுநின்றேன். வேலையை முடித்துவிட்டே இளைப்பாறுவேன்' என்றான். அப்பொழுது மிரந்தை, 'ஏந்தலே! தாங்கள் சிறிது களைப்பாறுங்கள். யான் அக்கட்டைகளைத் தூக்கி யடுக்காநிற்பே' னென்றாள். தனது மெல்லியல்* அத்

தகைய கடும்பணியை முடிக்கத் தான் பார்த்திருப்பானே! ஆதலால் பரிதனன் அவளைக் குறையிரந்து தடுத்தான். அதினின்று இருவர்க்கும் சம்பாஷணை உண்டாயது. பணியோ முடிவுற்றிலது. மிரந்தை எண்ணியவண்ணம் இலக்ஷ்மீகரன் நூல் பயிலாது இவ்விருவரது சம்பாஷணத்தையும் அரூபியாய் நின்று கேட்டு ஆனந்தியா நின்றான்.

சம்பாஷணத்தால் மிரந்தையை வதுவையாகாத கன்னிகையெனத் தெளிந்துகொண்ட பரிதனன் அவளை நோக்கி, 'எனது கண்ணினுமினியாய்! உனது பெயர் யாதெனவே, அவள் நாணினளாயினும், அவனது வேண்டுகோளுக்கிணங்கித் தனது பெயரைக் கூச்சத்தோடு கூறித் தான் தனது தந்தையின் கட்டளையை மீறித் தனது பெயரை வெளியிட்டதற்காகப் பரிவுற்றாள். பரிதனனோ அவளது நாமத்தைக் கேட்டதால் தன்னை யறியாதே ஆனந்த பரவசனாய் அவளை நோக்கி,—

'அதியற்புத மிரந்தாய்! மிக்குயர்ந்த புகழிற்குப் பாத்திரமான குணக்குன்றமே! உலகத்தில் நின்னினும் அரும்பொருள் வேறுளதோ! நான் எத்தனையோ அரிய பெண்களைக் கண்ணுற்று அவர்களது பெருங்குணத்தைக் கண்டு வியந்ததுண்டு. ஒவ்வொரு மங்கையும் ஏதோ ஓர் நற்குணத்தைப் பற்றி அதனால் சிறப்புற்று விளங்கினள். ஆயினும் மருவற்றவளெவளையுங் கண்டிலேன். நீயோ, குற்றமோர் சிறிதுமற்று உலகிலுள்ள கற்பரசிகளது சீலம் யாவும் ஒன்றுகூடி யுறையும் மங்கையர்க்கரசியாய் விளங்காநின்றாய். உனக்கீடுபட்டேன்' எனக் கூறினன்.

முகமனை*ப் பொறுக்கலாற்றாத மிரந்தை மிகவும்

நாணங்கொண்டு அவனையே தன்னையாளும் நாயகனாக வரித்தாள். பின்னர் தனது காதலன் புதுவைநகர் அரசிளந்தோன்றல் எனத் தெளிந்தகாலை தனக்குற்ற பாக்கியத்தைத் தாங்கலாற்றாளா ஆனந்தமேலீட்டால் கண்ணீரைத் தாரைதாரையாய் வடித்தாள். பரிதனன் தன்பால் அளவிடற்கரிய பேரன்பை வகித்த பிரங்தையை மற்றும் புகழ்ந்து, பரவசத்துள் தான் அழுந்துமுன், இலக்ஷ்மீகான் அவர்கள்முன் பிரசன்னமாகி முதற்கண் 'தந்தை யேது செய்வாரோ'வென வச்சமுற்று நின்ற புத்திரியை, 'ஏ கண்மணீ, உனது செய்கைகளை யெல்லாம் மறைந்திருந்து அறிந்து மிகவும் சந்தோஷமுறு நின்றேன். காதல் மெய்யாயின் எவர்கள் கட்டிய வரம்பையும் அழித்து மேற்செல்லுமன்றே! நீயுமவ்வாறே யுனது கணவன்பால் பேரன்பைக் கொண்டு எனது சொல்லையுங் கடந்தாய்' என மனந்தேற்றி பரிதனனை இனிதாய் நோக்கி, 'ஓ புருஷதிலகமே! யான் கடின பணிக்கண் உன்னை யேவியது உனது காதலின் ஆழத்தைப் பரிசை செய்தற்காகவே. உன்னை எத்தனையோ நிஷ்டூரங்களுட் புகுத்தினேனாபினும் உனது நேசம் அணுவளவும் குன்றாது ஓங்கியே வளர்ந்தது. யான் நிற்குச் செய்த அபராதத்திற்குப் பரிசிலாக எனது கன்னிகாமணியை உனக்கன்புடன் தத்தஞ் சேய்யாநின்றேன். இவள் ஒப்பிலாக்குணமும் அழகும்வாய்ந்த தையல்நாயகியென யான் சொல்வேன். நீயுமவ்வாறே காண்பாய். வேதவிதிப்படி நீயிப் பெண்கனியை நினது நகர்சென்று அவண் விவாகமகோத்சவங் கொண்டாடலாம். அதுவரை அவள் உன்னிடமிருப்பினும் கன்னிகையாகவே யிருக்கக்கடவள்.

காமனுக்கிடங்கொடாது அவளோடுறையும் நினது ஆற்றலைக் காண மகிழ்வேன். காமனை யடக்கியாள்பவரே நன்மகவைப் பெறுவர். நீங்களும் சற்புத்திரரைப் பெறக்கடவீர். வதுவை நிகழுமுன் மதியிழந்து இந்திரிய வயப்படுவீராயின் உங்கட்கு உண்டாகும் மக்களால் துக்கமே விளைதாநிற்கும். பிற்காலசுகத்தை நாடி தற்காலம் சிறிது சித்தஜனை*யடக்கி வாழ்வீர். நான் சிறிது பணிமேற்சென்று திரும்ப வருவல். அதுகாறும் சம்பாஷித்துக் கொண்டிருமின்' எனச் சொல்லிச் சிறிது அவர்களைவிட்டு விலகினான்.

உடனே ஆரியை வருதலும் இலக்ஷ்மீகரான் அவளை நோக்கி, 'ஏ தெய்வப்பாவாய், நான் எனது மந்திரசக்தியின் பிரபாவத்தை இத்தம்பதிகளிருவர்க்கும் காட்டியவர்களை ஆச்சரியத்துள் ஆழ்த்த நினையாநின்றேன். நீ கடிதில் எனது ஆற்றலைத் துணைக்கொண்டு நின்னினத்தாராகிய பூதங்களைக் கொணர்தி. விரைந்து செல். உங்களுட் சிலர் தேவிகள் படிவமாய் நின்று நம் சிறுவர்க்கு ஆசிகூற வேண்டு' மெனவே, ஆரியை நொடிப்பொழுதில் தெய்வங்களை வரவழைத்தாள். இலக்ஷ்மீகரான் தனது மகளையும் மருமகனையும் நோக்கி, 'நீவிர் வாய்திறக்காது மௌனமாக[7] சித்திரப்பாவைபோலிருந்து நிகழ்வதை நோக்குதிர்' என்றான்.

இலக்ஷ்மீகரானது ஆணைக்கிணங்க ஆரியை காளி

---

[7] மாயையால் விளையுங்காட்சி வார்த்தையாடின் உடனே மறையுமாதலால் இலக்ஷ்மீகரான் இவ்வாறு கூறினன். அன்றியும் பின்னர் தானே வாய்திறந்தபோது அம்மாயக்காட்சித் திடீரென மறைவுறுகின்றதன்றே.

யுருத்தாங்கி தம்பதிகளின்முன் பிரசன்னமாகி தானிய லக்ஷ்மியைப் பிரார்த்தித் தழைத்தாள். உடனே மற் ருேர் பூதம் பூமகளுருவெய்திப் பிரசன்னமாகிக் காளியை நோக்கி, 'சிவபெருமான் தேவிக்குத் தோழி! அம்பிகை நம்மை யிவணழைத்தது எதற்காக' வென்றது. அப் போழ்து துர்க்கை,'மெய்க்காதலிற் றலைநின்ற இத்தம்பதி ளது வதுவையைக் கனப்படுத்தி யவர்களை வாழ்த்தற் பொருட்டே' என்ருள். உடனே அம்பிகையும் பிரசன்ன மாகி, 'இலக்ஷ்மி, க்ஷேமந்தானே,என்னுடன் போதி, நாமி ருவரும் இதோவிருக்கும் தம்பதிகளை வாழ்த்தி வரங் கொடுப்பாம்', என்றனள். தானே முதற்கண் தம்பதிகளை நோக்கி,

'புகழும் நிதியும் காமமும் நெடுவாழ்வும் விருத்தி யும் காலந்தவரு வின்பமும் எப்போழ்துமுங்களை விட்டு நீங்காதுறையுமாறு அம்பிகையாகிய யான் உங்களை வாழ்த்தாநின்றேன்' என ஆசீர்வதித்தனள்.

பின்னர் தானியலக்ஷ்மி அவரை நோக்கி, 'மண் ணின் விளைவும், ஐஸ்வரியமும், களஞ்சியங்களும், கொத் துக்கொத்தாய் பழக்குலைகள் கொண்ட திராக்ஷ செடிக ளும்,பலம் நிறைந்த மரங்களும்,உங்கட்கமைந்து தரித்திர மென்பது உங்களைக் கண்டோடும்படியான வாழ்வைப் பெறக்கடவீரென பூமகளாகிய யான் வாழ்த்தாநின்றேன்' என ஆசி கூறினள்.

இவ்வதியற்புதக் காக்ஷியையும் தனக்குற்ற மங்க ளங்களையும் கண்ட பரிதனன் ஆனந்தமேலீட்டால் தனது மாமனுரை நோக்கி, 'இவை யெல்லாம் பூதங்களின் செய லென நான் எண்ணலாமோ' வென்ருன். அதற்கு

இலக்ஷ்மீகான், 'ஆம், ஆம். நமது விஞ்சையின் வலி யால் நமக்காட்பட்ட பூதாதி பிசாசங்களி னுதவியா லேயே இவ்வரிய மாயா தரிசனத்தை உங்களது பிரீதிக் காகக் காட்டுவித்தேன்' என்ருன். 'இத்தகைய அற் புதங்களை விளைக்கவல்ல பேரறிஞராகிய தங்களை மாமனு ராகக் கொண்ட யான் இத்தீவையே சொர்க்கமாகக் கருதா நின்றேன். நான் சதா *விவணை யுறைதரப் பிரியமுரு நின்றேன்' என்ருன். இவ்வாறு பரிதனன் தனக்குற்ற வாழ்வைக் கொண்டாடிக்கொண்டு மிரந்தையோடு வீற் றிருக்குங்கால், மறைவிருந்த பூதங்களுட்சில அப்ஸா ஸ்திரிகளது உருக்கொண்டு பிரசன்னமாயின. சிறிது நேரத்தில் அறுப்புத்தொழிலாளராக மற்றும் சில பூதங் கள் வேடிக்கையான உடைதரித்து உருமாறி நின்றன. இவ்வாடவர், முன்னம் வந்து நின்ற மகளிர் கைகளைக் கோத்துக்கொண்டு அதியற்புத நடனஞ் செய்யா நின்ருர். இவ்வாறு காலம் மிக வினிதாய்க் கழிதாநிற்கையில், இலக்ஷ்மீகான் மனத்தி ் ஓர் நினைவு வருதலுமே, அவன் திடீரென உக்ரமாக வெழுந்து மோனத்தைக் கைவிட்டுப் பேச வாரம்பித்தான். உடனே யாவும் க்ஷணப்பொழு தில் மாயமாய்க் காணுமற்போயின. அப்போழ்து பரி தனன் விசனமுற்றுத் தனது கண்ணுட்டியை நோக்கி, 'உனது பிதா வேதோ உருத்திராவேசஞ் கொண்டு நிற் கின்றதாகத் தோன்றுகிறது' என்ருன். மிரந்தையும் அதற்கிணங்கத் தனது காதலனை நோக்கி, 'யானும் இந் நாள்காறும் இத்தகைய கோபாவேசத்தோடு எந்தை யோர் போதும் நின்றதைக் கண்டிலேன். இஃது எனக்கே மிக்க ஆச்சரிய'மென்ருள். தனது மனோநிலை மாறி

யதைக்கண்டு சிறிது வெருக்கொண்ட தனது மருகனை நோக்கி, 'குழந்தாய், நீ சிறிது அச்சமுற்றாய்போலும். அஞ்சேல், நான் உங்கட்குக் காட்டக் கருதிய மாயா நாடகங்கள் யாவும் ஆடியோய்ந்து விட்டன. இந்நாடக மாடிய பாத்திரங்கள் யாவும் பூதபிசாசங்களென முன்னரே யுனக்குணர்த்தினேனன்றோ! அவைகள் கரைந்து கரைந்து காற்றோடு காற்றாயின. இதனால் யான் நினக்கு ஓர் ஞானோபதேசஞ்செய்வல், செவிக்கொள்தி,—

உனது கண்முன் மெய்யாய்த்தோன்றி நல்ல வின் பத்தைப் பயந்த இம்மாயா தரிசனம் உள்ளவா பண்டமற்று எவ்வாறு முடிவில் ஒன்றுமில்லதாய் ஒழிந்ததோ, அவ்வாறே வானுரவோங்கி மேகத்தையளாவுங் கோபுரங்களும், பகட்டான மாளிகைகளும், வினையமான தேவாலயங்களும், இவைமட்டுமோ, பெரும்பந்துபோ லுருண்டு சமுத்திரத்தாற் சூழப்பெற்ற இம்மண்ணுலகமும், அதன்கண் அமைந்துள சராசரப்பொருள் யாவும், சூனியமாம் தன்மையன. ஞானக்கண்கொண்டு நோக்கின் இப்போழ்தே பொய்யென விளங்கும். போகத்திற்குரிய உலகமும் மற்றைப்பொருள்களும் ஓர்வழி நிற்க, நாம் போகங்கொள்தற்கு நமக்கமைந்த உடல்தான் எப்பெற்றியது! சொற்பனவுலகம் எம்முதற்பொரு[8] ளாலாயதோ அப்பொரு

---

[8] ஓர்பொருளை யுண்டாக்கவேண்டுமாயின் மூன்று காரணங்க ளமையவேண்டும். அவை முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம்.

ஓர்பானையை யுண்டுபண்ணுதற்கண் மண் முதற்காரணம்; தண்டச்சக்கரம் துணைக்காரணம்; குயவன் நிமித்த காரணம்.

முதற்காரணமென்பது ஆங்கிலத்தில் Material Cause எனப்படும்; துணைக்காரணம் Instrumental Cause எனவும், நிமித்தகாரணம் Designing Cause எனவும், கொள்ளப்படும்.

ளாலேயே நமது உடலமும் அமைந்தது. பானைக்கும் மண்ணிற்கும் யாதுசம்பந்தமோ அத்தகைய சம்பந்தமே நமது தேகத்திற்கும் மாயைக்கும். நமது ஆயுளோ தூக்க மெனும் ஓர் வரம்பை எட்டி முடிவுறும் பெற்றியது. நிற்க. குழந்தைகாள், என் மனமேதோ மிகவும் நலிவுறு நின்றது. எனது மெலிவால் நீங்கள் பரிவுறவேண்டாம். சிறிது உட்சென்று இளைப்பாறுமின். யான் அங்குமிங் கும் உலாவிக்கொந்தளிக்கும் என் மனத்தைக் கடிதிற் சாந்த நிலைக்குக் கொண்டுவாநிற்பேன்' எனவே, இரு வரும் 'தங்கட்கு க்ஷேமமுண்டாகுக' வெனமொழிந்து குகைக்குட் பிரவேசித்தனர். அதற்குள் ஆரியை வந்தாள்.

இலக்ஷ்மீகான் மாயா நாடகத்தைத் திடீரென முடிவு கண்டகாரணம் யாதெனின், கலியனும் கப்பலிலிருந்து வெளிப்பட்டாருள் ஓர் குடிகாரப்பயலும் ஒரு சூழ்ச்சி செய்து ஓர் கோமாளியையு மிட்டுக்கொண்டு தன்னை உயிர் வாங்க நினைத்திருந்தார்கள். ஆரியையால் முன்னமே அவரது கபடத்தையறிந்த இலக்ஷ்மீகான் எங்கே திடீ ரெனவவர்கள் சூதாய்த் தன்னை முடிவுகாண்பரோ வென நடுக்குற்று அவரை சிட்சிக்க வெண்ணமுற்றான். 'ஈன னுக்கிடங்கொடுப்பின் இருப்பிடம் பாழ்' எனு முது மொழிப்படி கலியன் இலக்ஷ்மிகானைக் கொன்று மிரந்தையைக் குடிகாரப்பயலுக்கு மனையாட்டியாக்கி அவனை அவ்வடவிக்கு அரசனாக முடிசூட்டி தானும் கோமாளியும் அவனுக்கு மந்திரிகளாகவிருந்து அடவியை யாளவேணுமென வோர் சூழ்ச்சி செய்திருந்தான். இலக்ஷ்மீகான் அயர்ந்து நித்திரைபுரியும் தருணத்தை

நாடிக் கொலைசெய்பு மெண்ணத்தோடு அம்மூவரும் குகையை யடுத்து சிலவம்புகள் செய்யவே, ஆரியையும் அவள் வழிபணிபுரியும் மற்றை பூதங்களும் வேடராக வும் வேட்டை நாய்களாகவும் உருத்தாங்கி போக்கிரிகள் மூவரையும் விரட்டி விரட்டிக் கதறக் கதற வடித்து அவர்க ளெண்ணத்தில் மண்ணைக்கொட்டின.

நமது இலக்ஷ்மீகரன் மாயையால் விளைத்த சண்ட மாருதத்தின் கருத்துத்தான்யாது ? தனது பகைஞரைக் கொன்று பழிதீர்க்கவோ ? அன்று. தன்னெஞ்சே தன் னைச் சுடுமென்பா ரன்றோ ! அவ்வாறே தனது எதிரிகளை பச்சாதாபத்தால் மனமுருக்கி, அவர்கள் நெஞ்சத்தை நல்வழிக்குப் பக்குவஞ்செய்து, பின்னர் திரும்பவும் அவர்களை சிநேகர்களாக்கி ஒன்றுகூடி, மண்ணுலகவாழ் வில் கிடைத்தற்கரிய அருளின் குழவியாகிய அன்பை விருத்திசெய்வதற்கே அவன் மனம் நாட்டமாய் ஒருப்பட் டிருந்தது.

‘ அன்பும் சிவமும் இரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்,
அன்பே சிவமா யமர்ந் திருப்பாரே !

இலக்ஷ்மீகரற்கு பண்டையிற் றீங்கிழைத்தவர் கீர்த்திசேனனாகிய தனது தம்பியும் அலஞ்சனெனும் புதுவைநகர் மன்னனும் அவனது பின்றோன்றலாகிய சிவாதித்தனும். இவருள் கீர்த்திசேனனும் சிவாதித் தனும் இத்தீவிற் றள்ளுண்டு வருத்தமுற்ற காலையும் தமது தீயவொழுக்கத்தை விடாராய் அலஞ்சனையும் கிழமந்திரியாய காஞ்சாலனெனும் அருளாளனையும்

தூங்கும் அமயத்திற்கொன்று தம் வாழ்வை உயர்த்தலா மென வெண்ணிய மதிக்கேடர். இலக்ஷ்மீகானே சகல விஷயங்களையும் ஆரியையா லுணர்ந்து கேடுகளொன்றும் நேராவண்ணம் தெய்வமாயிருந்து காத்துவாநின்றான். சிறுதுட்டர் மூவரையும் நாய்களால் விரட்டியலுக்கச் செய்ததாக கூறினும்; ஆரியை அதன்முன்னர் இயற்றியவோர் பணியைச் சிறிது கூறுதும்.

ஆரியை அநேக விசித்திரங் காக்ஷிகளையும் தேவகானங்களையும் காட்டி அலஞ்சனுதியாது புத்தியை மருட்டி அவர்களை அச்சத்துள்ளிருத்தினள். இவர்கள், செய்வதொன்றும் தோன்றாது அலைந்து அலைந்து சோகமோர் பக்கமும் பசிப்பிணியோர்பக்கமும் வாட்டத் தவித்த காலை, அவர்கள்முன், உண்பதற்கினிய உணவுகள் பரப்பியவோர் மேஜை தென்பட்டது. ஆயினும் அவர்கள் அதனை யடுத்து கைக்கெட்டிய போஜனத்தை வாய்க்குட் போட எத்தனித்தமாத்திரையானே விண்ணில் மின்னலும் பேரிடியும் தோன்றி அதனின்றும் ஆரியை சிறகு முளைத்த ஓர் பரிய பெண்ணுருவாய் வெளிப்போந்து அம்மேஜையைத் தனது * பக்ஷங்களால் இடிக்கவே அஃது மாயமாய்க் காணுமற் போயிற்று. அவர்களோ அச்சத்தால் வெருண்டு அலமந்து நின்றனர். அப்போழ்து அப்பக்ஷிப்பெண் அவருள் காஞ்சாலனுகிய அருளாளனையும் ஏனையோரையும் நீக்கித் தனது பிரபுவிற்குத் தீங்கிழைத்த மற்றை மூவரையும் நோக்கி,

‘ நீங்கள் மூவரும் பெரும்பாவிகள். நீங்கள் மனுஷவர்க்கத்தராய் வாழ்தற் கருகால்லீர்; அதுபற்றியே நும்விதி நும்மை இவ்வத்துவானத் தீவிற் றள்ளிற்று,

உங்களறிவை யான் மழுங்கவடித்தேன். ஓகோ! நீங்கள் வாளையுருவி என்னை கொல்லலாமென நினைவு கொள்கிறீர்களோ! அறிவிலிகாள், காற்றை எவனேனும் வாளாற் பிளந்து துன்புறுத்த வல்லனோ! அவ்வாறே எம்மை நீவிர் செய்யப்புகும் தொழிலும்; நிற்க. உங்கட்கு நல்லறிவு வூட்டாநிற்பேன். கேட்பீர். நீங்கள் மூவரும் இலக்ஷ்மீகரனை மிலான் நகரத்தை விட்டு அநியாயமாய்த் துரத்தின பாவம் நும்மனத்தைவிட்டு நீங்கியிருக்காது. அவரது நாட்டைப் பிடுங்கிக்கொண்டதுமன்றி அவரது உயிர்க்கும் அவரது குழவியின் பிராணனுக்கும் முடிவு காணக்கருதி ஓட்டைப்படவிலேற்றி கடற் கிரையாக்கப் பார்த்தீர். அருளைக்கைவிட்ட பாவிகாள்! வருண பகவானோ, அவர்களுக்கிரங்கி மங்களத்தை விளைத்தார். நீவிர்புரிந்த பெரும் பாதகத்தைக் கண்ட தெய்வம் உங்களை உடனே ஒறுக்காது* வாளாவிட்டு இப்போழ்து உங்கட்கு நுமது தீவினைப்பயனை ஊட்டாநின்றது. தெய்வம் நின்றுகேட்குமென்பது பொய்க்குமோ! பேதையீர்! கடலும் மற்றைச் சராசரங்களும் உமது பாவத்தை நோக்கிச் சீறியெழுந்து உங்கள் மனத்தை மிகவும் புண்படச் செய்யாநின்றன. ஏ, அலஞ்சனே, உனது குமாரனை யிழந்து சோகத்துள் ஆழாநின்றாய். நும் தீவினை இத்துடன் உங்களைவிட்டு விலகுமென வெண்ணற்க"

எனச்செப்பவே மற்றுமோர்தரம் மின்னலும் பேரிடியும் விளைந்தன; திகிலுற்று மனம்நைந்து நின்ற பாவிகளை விட்டு ஆரியை உடனே விண்ணிற்கரந்தாள். இவ்வரி செயலைக்கண்டு இலக்ஷ்மீகரன் ஆரியைக்கொண்டாடினன்.

அலஞ்சனும் கீர்த்திசேனனும் சிவாதித்தனும் மதியிழந்து, திகிலுற்று, மனம்நைந்து, நடைப்பிணம்போல் நிற்பதைக்கண்ட காஞ்சாலன், அம்மூவரையும் நோக்கி, 'ஈதென்ன, தங்கள் நிலை ஏதோ விபரீதமாகத் தோன்றா நின்றதே!' என்றான். அதற்கு அலஞ்சன், 'ஐயோ, வெகுபீதியாயிராநின்றது. இலக்ஷ்மீகரனது நாமத்தை என் செவிக்கு எட்டக்கூறி என்னைத் திகிலுறச்செய்யா நின்றதே! அவ்வொலி கடலிற் பிறளும் அலையோ? விண்ணில் வீசுங்காற்றோ? அல்லது தெய்வப்படையான இடியோ? நான் செய்த அகீர்த்தியத்தை எடுத்துக்காட்டி என் மனத்தை புண்படுத்தியதே! யான் எனது புதல்வன் ஆழ்ந்துபோனவாறே சமுத்திரத்திலாழ்ந்து உயிர்துறப் பேன்' என்றான். அப்போழ்து காஞ்சாலன் தனக்குட் சொல்வான், 'இம்மூவரும் சாகத்துணிந்தனர். உடனே வருத்தாது, சிறிதுகாலஞ் சென்று வருத்தவல்ல ஓர் வகை விஷத்தைப்பருகினவரை பொப்ப இவர்கள் பச்சாத் தாபமென்னும் நஞ்சாற்றமது மனம் கடிபுண்ணப்படு கின்றனர். ஏமாந்தர்காள், நீங்கள் இம்மூவரும் சோகத் தாற் றற்கொலைபுரிந்துகொள்ள விடங்கொடாது காக்கக் கடவீர்' என்றான்.

பின்னர் அம்மூவரும் அவரைத் தொடர்ந்து மனந் தேற்றச்சென்ற மற்றையாரும் குகைப்புறத்தே யமைந் தவோர் எலுமிச்சப் பொதும்ப*ரி லோதுங்கி மனம் நைந்து வருந்திக் கொண்டிருந்தனர். இவையாவும் நமது முனிவன் தனது மருகற்குக்காட்டிய மாயாதரிசனத் தின்முன் நிகழ்ந்தவை.

தனதெண்ணங்களெல்லாம் பழுத்து மனமும்

பழுத்து அருள் வழிநின்ற இலக்ஷ்மீகான் தனது பணி யைமுடிவிடங்காண வெண்ணங் கொண்டான். உடனே அவன் தனது இஷ்டதேவதையை அருகழைத்து, 'ஆரி யையே, எனது பகைமன்னனும் அவனது பரிவாரமும் யாது செய்கின்றன' ரெனக்கேட்டான். 'அவர்கள் யாவ ரும் மனச்சிறையுற்று நமது எனுமிச்சம் பொழிற்கண் தம் வயமிழந்து நையாநின்றனர். நடைப்பிணக்கோலத்த ராகிய அவர்கள் அதனை விட்டு தங்களது அநுமதியின்றி யணுவளவும் விலகலாற்றார். மன்னனும் அவனது தம்பி யும் தங்களது தம்பியும் அறிவுபுறம்போயவராய்க் கழி விரக்கத்தால் மனம் மொத்துருநின்றனர். ஏனையோர் அவர்களை ஒருவாறு தேற்றுநின்றனர். இவ்வாறு தேறு தல் செய்வாருள் தங்கட்கு மிகவும் இனியராகிய காஞ் சாலர் மிகவும் இரக்கமுடைய நெஞ்சத்தாராதலின், மூவ ரும் படுமவத்தைதையைத் தாங்கலாற்றாராய், தமது தாடி யெல்லாம் நனையும் வண்ணம் கண்ணீரைத் தாரைதாரை யாய் வடிக்கின்றார். தங்களது மந்திரபலம் அவர்கள்பால் மிகக்கடுமையான பணிபுரிகின்றது. தாங்கள் அவர்களு றும் அவத்தையை நேரிற் கண்கொண்டு பார்ப்பீர்களா யின் தங்கள் நெஞ்சம் இளகாதிருக்கப் பாலதோ' வென் றாள் ஆரியை.

அப்போழ்து இலக்ஷ்மீகான், 'உள்ளவா நீயும் அவர் கள் நிலைகண்டிரங்குகின்றாயா?' எனவே, 'பேயளாகிய யான் மண்ணிற்பிறந்த மக்கள் குழாத்தளாயின் உருக்க முறுதிருக்கற் பாலனோ?' வென ஆரியை கூறினள். இதனைக் கேட்ட இலக்ஷ்மீகான், 'காற்றேவடிவாகிய பேயான நீயே மாந்தருறும் வாதையைக் கண்டு பரிவுறு

வையாயின், அவரோடொப்பப் பிறந்த யான் கல்நெஞ்சத் தனுயிருத்தல் எவ்வளவு பாவம்! அவர்கள் செய்த பெரும்பாதகங்களை நோக்கி அவர்பால் எனக்கு வெகுளித்தீ, ஒருவழி பொங்காநின்றதாயினும், எனது பேரறிவைத் துணைக்கொண்டு எனது கோபாக்னியைத் தடுத்தாள்வேன், அருள் அரும்பொருளோ! ஹடம் அரும்பொருளோ! எனக்கெதிரிகளாயிருந்தோர் இப்போழ்து தமது செயலை நோக்கி உள்ளவா பரிவுற்று மனம் நைந்து துடிக்கின்றூராதலின் அதுவே சாலும். இனி அவரைத் துன்புறுத்த என் மனம் செல்லாது. ஏ ஆரியை! கடிதில் அவரைக்கிட்டி பந்தத்தினின்று விடுவி ; யானும் எனது மோஹனவிஞ்சை*யை அவர்பானின்று விலக்குகிறேன். அவர்கள் பிராந்தி தீர்ந்து சுயவறிவைப் பெற்று தம்வயமடைவர்' எனச்செப்பினன். உடனே ஆரியை அவர்களை கடிதிலிட்டுக்கொண்டு வருதற்குப் போயினள்.

ஏகாந்தமாய் இருக்கும் அவ் அமயத்தில் நமது அறிஞன் தன் மனத்திலுள்ள எண்ணத்தை வெளியிடுகிறுன் : ' மலை, ஓடை, தடாகம், பொழில் இவைகளை உறை விடமாகக்கொண்ட பூதங்காள்! கடல் மணலிற் சுவடுபடாது அலையோடோடித் திரும்புவதே லீலையாகக் கொண்ட தேவதைகாள்! நிலவெரியும்போழ்து ஆடுகேடியாப் பசும்புற் சக்க*ரத்தைச் சுற்றிச் சுற்றியோடி விளையாடும் மோகினிகாள்! மற்றுமுள்ள தெய்வங்காள்! எனது மந்திர சக்தியால் நும்மைப் பணிகொண்டு யான் விளைத்த மகத்துவத்தை யென்னென்றுரைப்பேன்! புவியின் இருளை முழுமுற்றும் கிழித்து ஒளிவீசும் நண்பகல்

ஞாயிற்றை ஒளி மழுங்கவடித்து ஒன்றுந் தோன்றுவண்ணம் பேரிருளை விளைத்துளேன்! முரண்பட்ட மருத்துக்களைக் கூவி பசிய சமுத்திரத்திற்கும் அதனைச் சுற்றித் தோன்றும் நீல அண்டகடாகத்திற்கும் போர் மூட்டி அலைகளை மலைபோல் எழுப்பி அல்லோலகல்லோலப்படுத்தியுளேன். கண்ணைப் பறிக்கும் மின்னலையும் அதனை விடாது கிடுகிடென யெவரும் நடுங்கத் தொடர்ந்துவரும் இடியையும் என்வயப்படுத்தி வானுற வோங்கிய மலைவாகைகளையும் இரும்பின் வலிகொண்ட கருங்காலி விருக்ஷங்களையும் டாராய்ப் பிளந்துளேன்! கடற்கரையடுத்த கடும்பாரைபோன்ற துவீபங்களும் நெக்குவிட்டு நடுநடுங்கின! சாலாவிருக்ஷத்தையும் தேவதாருவையும் ஆணிவேரோடு பூமியினின்று ஒரே பிடுங்காய்ப் பிடுங்கி விண்ணிற் பறக்க வெறிந்துளேன்! இவைமட்டோ.

கல்லறைகளுட் புதையுண்டு கிடந்த பிரேதங்களும் எனதாணை வழியெழுந்து வேதாளங்களாகி எனது குற்றேவலைச் சிரமேற்றாங்கி முடித்தன! ஆயினும் இத்தகைய பிரமாதங்களை விளைக்கவல்ல இம்மந்திர சக்தியைத் துறப்பேன். இதனால் உள்ளவா பலன்யாது? ஆயினும் இனிதான ஓர் பணிமுடியும் வரை இஃது உதவவேண்டும். இதனைக்கொண்டு ஓர் தேவகானத்தை யுண்டுபண்ணி இவர்களது அறிவைப் பிணித்த மோகன சக்தியை நெகிழ்த்து இவரை மயக்கும் பிராந்தியை ஒழிப்பேன். அது முடிதலுமே மாத்திரைக்கோலை முறித்து பூமியுள் மிக்க ஆழ்ந்துட் புதைப்பேன். எனது விஞ்சை நூல்களையும் சமுத்திரதில் ஈயக்குண்டால்* ஆழாங்காண முடியாத பாதலத் தழுத்திப் போடுகிறேன்.' நிற்க.

எனுமிச்சந்தோப்பிலிருந்த அலஞ்சனுதியர் யாவரும் ஆரியையால் நடத்தப்பட்டு இலக்ஷ்மீகான் தன் முன்கோலிய மண்டலச் சக்கர நடுவண் சுதந்தரமற்று நின்றனர். மந்திரசித்திகைவந்த நமது யோகி தனது வசியமந்திரங்*களை யவர்பானின்று விலக்கிடலும் கதிரவன் உதயமாகுங்கால் இருள் வர வர விலகி ஒளி மீசுர*மாவதுபோல் மந்திர உச்சாடனத்தால் தம் நிலையை மறந்து பிராந்தி வயப்பட்டு நின்ற அவர்களது அறிவு, மயக்கம் நீங்கி இயற்கை நிலையடையா நின்றது. முதற்கண் காஞ்சாலனை வாழ்த்தி நல்வரவு கூறிப் பின்னர் அலஞ்சனையும் தனதுடன்பிறந்தானையும் சிறிது கடிந்து உடனே அவ்விருவரையும் மனப்பூர்வமாக மன்னித்தான். ஆயினும் மயக்கம் முற்றுந் தீராத அன்னவர் அவனை யாரெனத் தெரிந்துகொண்டிலர். இறும்பூதெய்திய காஞ்சாலன் அச்சமயம் தெய்வத்தை நோக்கி, 'கஷ்டத்திற்கும், மனவாதைக்கும், வியப்பிற்கும், உறைவிடமாகிய இந்நிலம், ஓ தெய்வமே! மனத்தை அச்சத்துள் ஆழ்த்தாநின்றது. இவ்விடத்தைவிட்டு எங்களை யகற்றுயோ!' வென்றான். ஆயினும் இலக்ஷ்மீகான் தனது பெயரைத் தெரிவித்துத் தன்னை இன்னானென அவரனைவரையும் உணர வைத்தனன். அலஞ்சன் மனதார மன்னிப்புக்கேட்டான். கீர்த்திசேனன் பிராத்ருவாஞ்சை*மேலிட்டுத் தேம்பியழுது மன்னிப்பைப் பெற்றான். நமது அறிஞன் காஞ்சாலனைத் தழுவி யானந்தத்துள் அழுத்தினான். அப்போழ்து, அலஞ்சன், 'இஃது எதிர்பாராத நன்மையை விளைக்கா நின்றது. ஆயினும் புத்திரசோகம் என்னையோர்பக்கம் வாதியா நின்றதே'

யெனக்கூறுநிற்ப, இலக்ஷ்மீகரன், 'எனக்கு எனது இராஜ்ஜியம் உங்களாற் றிரும்பக்கிடைக்காநிற்ப, யான் அதற்குப் பரிசிலாய்த் தங்கட்கு ஏதேனுமோர் நன்மை விளைக்காது வாளாவிருப்பது அயுக்தம்; தயைசெய்து யாவரும் சிறிது எனது குடிசிலுள்வருக' வென யிட்டுக்கொண்டு போய் ஓர் கதவைத்திறக்கவே தப்பிப் போனதாகப் பாவிக்கப்பட்ட அரசிளங் குமான், அதிரூபலாவண்யமான தேவரம்பைபோன்ற மிரந்தையோடு சதுரங்கமாடிக் கொண்டிருப்பதை யாவரும் கண்களிகூரத் தரிசித்தனர். பரமசந்தோஷத்தைக் கொண்ட புதுவைநகர் மன்னன், 'இவ்வித வற்புத சுகத்தை இத்தீவம் அளிக்கவல்லதாயின் பரிதனனை மற்றுமோர்தரம் தப்பக்கொடுக்கவும் வல்லேன்' என்றான். தனது தந்தையின்வரவைத் திடீரெனக்கண்ட பரிதனனோ, 'கொந்தளித் தார்ப்பரிக்கும் இக்கருங்கடல், வெளிப்படையாக அச்சத்தைத் தருவதாயினும், உள்ளவா பெருங்கருணை வாய்ந்ததுவே. வீணே அதனைக் கடிந்தேனே, என்ன பாவ'மெனச் செப்பிக்கொண்டே தனது பிதாவை நமஸ்கரித்தான். பின்னர் அலஞ்சனும் ஏனையோரும் மிரந்தையை இலக்ஷ்மீகரனது திவ்விய குமாரியெனத் தெளிந்து உவகை யெய்தினர். அப்போழ்து காஞ்சாலன் மிகவும் பரவசமுற்று, 'விண்ணுறை தெய்வங்காள்! சிறிது இப்பூவுலகைக் கீழ்நோக்கி இவ்வதுவராது *சிரத்தில் கிரீடத்தைச் சூட்டுமின். தெய்வங்களாய உங்களாதீனமாயன்றே யாங்கள் யாவரும் எங்களை யறியாது இவ்விடத்தை யுற்றேம்' என்றான்.

அலஞ்சன்—ஆம், ஆம். காஞ்சாலரே நீர் சொல்வது முற்றும் பொருத்தமே. இம்மங்களத்திற்குக் காரணமாகிய தெய்வத்தைப் போற்றுதும்.

காஞ்சாலன்—மிலானைவிட்டு இலக்ஷ்மீகரன் துரத்தப்பட்டது அவனது சந்ததியார், முடிசூடும் புதுவை நகர் மன்னராய் வாழ்தற்கோ! பழம் நழுவி மிக வினிமையாய்த் தேனில் வீழ்ந்தது! மட்டுக்கடங்காப் பரவசத்தால் நர்த்தனஞ் செய்வாம். இம்மங்களத்தைத் தங்கமய அக்ஷரங்களால் ஸ்தம்பங்களில் பொரித்து எங்கணும் தொனிக்கச்செய்வாம். ஒரே யாத்திரையால் நமக்குற்ற சந்தோஷந்தானென்னே! அலஞ்சன் புத்திரி தூனியம்பதி அரசனை மணந்தாள்! அவளுடன் பிறந்தானாகிய பரிதனன் கட்டழகியாகிய மிரந்தை தனக்கு மனையாட்டியாகும் பாக்கியத்தைப் பெற்றான்! இலக்ஷ்மீகரனோ இழந்த தனது நாட்டைப்பெற்றான்! நாமோ நம்மைவிட்டோடி நின்ற அறிவைத் திரும்பப்பெற்றோம்!

இவ்வாறு யாவரும் பரமசுகத்தி லாழாநிற்கையில், இலக்ஷ்மீகரனது தம்பி மிகவும் மனம்நைந்து, தான் செய்த அக்கிரமத்தைத் தாங்காளுப், அலறியழுவதைக் கண்ட நமது அறிஞன் அவனை இறுக மார்போடணைத்து, ' தம்பி, நீ துக்கமுறேல், நீயோர் குற்றமுஞ் செய்தாயல்லை. எல்லாம் அந்தர்யாமி * யாய் நின்று உலக நாடகத்தை ஆட்டுவிக்கும் தெய்வத்தின் கூத்து. பின் விளைவதை யெல்லாம் தனது பேரறிவால் முன்னரே தெளிந்த ஈசன் உன்னுட்புகுந்து என்னை நாட்டைவிட்டோட்டும்படி உன்னைக் கருவியாய்க் கொண்டான். ஏனெனில் துக்கம்போன்ற இப்பிரிவாலன்றே, நமது மகள்

மிரந்தை புதுவை நகர்க்குப் பட்டமகிஷியானாள். இப் பிரிவாலன்றே அரசிளங்தோன்றல் நமது குமாரியை இவ் வனாந்தரத்திற் கண்டு காதலுற்று அவட்கு மணாளனானன்,' என்றான்.

'சாட்டையிற் பம்பரசாலம் போல் எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து நெஞ்சமே
நாட்டமொன்றற அருட்செயலில் நிற்றிகாண்
வாட்டமொன்றனும் வருவதெங்ஙனே.'

இவ்வரிய வுபதேசத்தால் கீர்த்திசேனன் பரவசத்தனாய் தெய்வத்தை நம்பி நல்வழியுற்றான். பகைநீங்கி இன்பம் ஊற்றெடுப்பதைக் கண்ட அருளாளனாகிய காஞ்சாலன் திருவருளைத் துதித்து பெண்ணையும் மாப்பிள்ளையையும் 'நீடூழி வாழ்க' வென ஆசி கூறினன். போருளனாகிய காஞ்சாலன் தன்னை வாழ்த்தியபோழ்து மிரந்தையுற்ற மகிழ்ச்சி உரைக்கடங்குமோ!

இவ்வாறு யாவரும் பேரின்பமெய்தி நிற்கையில் தூரத்தே மீகாமனும் தோணியியக்குவோனும் ஆரிமையால் அவரறியாமே உந்தப்பட்டு அரச சன்னிதானத்தைக் கிட்டவே அலஞ்சனும் மற்றையாரும் வியப்பெய்தினர். அப்போழ்து காஞ்சாலன் அலஞ்சனதியரை நோக்கி தோணிக்காரனைச் சுட்டி, 'நான் முன்னமே இப்படுபயல் நம்மோடிருப்பதால் நமக்குக் கடலுளாழ்ந்துசாகும் சாவு நேராதெனக் கூறினனன்றே! தூக்குமரத்திற்கென்றே பிறந்த பயல் தண்ணீரிற் கிரையாவனோ! [9] நான் செப்பி

[9] 'தூக்குமரத்திற் சாவப்பிறந்தவன் ஓர்போதும் நீரில் மூழ்கிச்சாகான்' எனவோர் முதுமொழி யூரோப்பிலுளது. முதல் அநுபந்தத்தைப் பார்க்க.

ஆச்சரியத்தை யடைந்து, 'இன்னம் என்னென்ன புது மைகளைக்காணுதற்கிருக்கின்றேமோ' வென்றுன்.

இலக்ஷ்மீகரன், 'சகல புதுமைகளையும் கடிதில் விளக்கி யாவர்மனத்தையும் தெளிவுறச்செய்வேன்', எனக் கூறிக்கொண்டிருக்கும்போழ்தே, கோமாளித்திருங்கனும், குடிகாரத்திப்பனும், குரங்குமூஞ்கிக்கலியனும் ஆரியையா லுந்தப்பட்டு .அவணுற்றனர். கலியனது எட்டுக்கோண லான விகாரரூபத்தைக் கண்டார்யாவரும் அதிசயமுற்ற னர். நல்வினை விளைகாலமாதலால், கலியனுக்கும் நற்புத்தி வரவே அவன் 'இக்குடிகாரப்பயலை ஏதோ பெரியவனென வெண்ணி மதிமோசம்போய்த் தெய்வமென வழிபாடு செய்தேனே! எனதறியாமை இருந்தவாறென்னை! எனது பிரபுவே, யான் தங்களது அருளைநாடாநின்றேன். இனி புத்தியாய் நடக்கமாட்டுவேன்' எனச்சொல்லி இலக்ஷ்மீ கரனை மகிழ்வித்துப் போஜனத்தைச் சித்தப்படுத்தக் குகைக்குட்சென்றுன்.

இலக்ஷ்மீகரன் தனக்குற்ற அதிதிகளை நோக்கி, 'இவ்விகாரவுடலினன் இத்தீவை யான் வருமுன் அரசி யாய் ஆண்டுவந்த சிக்காராக்கியெனும் யோகினியது குமா ரன். அவள் மிகப்பொல்லாதவள். அவளது தீயசக்தியை நோக்கி சராசரங்கள் நடுக்கமுறும். அவளிறந்த சிறிது தினத்திலேயே யான் எனது இனிய குழவியோடும் இத் தீவை யடைந்தேன். எனது விர்த்தாந்தமனைத்தையும் போஜன முடிந்தபின் இவ்விரவில் உங்கட்குக்கூறிச்செவிக் கமுதந் தாராநிற்பேன். நாளைக்காலை யாம் அனைவரும் நாவா யேறி புதுவை நகரையடைந்து கோலாகலமாக நமது மக்களது திருக்கல்யாணத்தைக் கொண்டாடுவோம். இப்

போழ்து யாவரும் உள்ளெழுந்தருளி அடியேன் எனது சக்திக்கேற்றவாறு உங்கட்குச் செய்யும் விருந்தையேற்று என்னைக்களிப்பிக்கும்படி பிரார்த்திக்கிறேன்' எனச்செப்பி யாவர்க்கும் தக்கபடி திவ்விய போஜனஞ்செய்வித்தான்.

பின்னர்தான் வாக்களித்தவாறே தான் அத்தீவிற்கு வந்ததுமுதல் இதுகாறும் நிகழ்ந்த சகல விஷயங்களையும் கேட்டார் யாவரும் விம்மிதமுற்றுச் செவியமுதம் பருகுமாறு இனிதுகூறி அவரை ஆனந்தத்துள் ஆழ்த்தினன்.

சுதந்தரத்தைக் கருதி ஏக்கமுற்றிருந்த தனது இஷ்ட தேவதையாகிய ஆரியையைத்தனியழைத்து, 'நீ எனக்கு மிகவும் பிரீதியாய் எனது ஏவலை யெல்லாம் இனிதுமுடித்து என்னை மகிழ்வித்தாய். உன்னை விடாது குற்றேவல் கொள்வது தவறாகும். உனது குணத்தை நோக்கின் உன்னைக்காணாது மறந்திருப்பது ஒருவாறு என்மனத்தை வாட்டும். ஆயினும் உன்னைத்தடைசெய்ய மனமொருப்படேன். நீ போகலாம்.' எனச் செலவு கொடுக்கவே ஆரியை தனது எஜமானனைநோக்கி, 'எந்தாய்! ஏக்கமுற்றுக்கிடந்த அடியாட்குச் சுதந்தரங் கிடைத்த பாக்கியம் மிகவும் பெரிதே. ஓரேயொரு விண்ணப்பமுளது. யானும் எனது இனத்தாரும் தங்களைப் புதுவைநகர்வரை கூடவே வந்து வழியனுப்பச் சித்தமுறா நின்றோம். நாங்கள் அதுவரை துணைவருதலால் கப்பலுக்கு ஓர் தீங்கும்நேராது மாருதவடிவமாய் அதனை இனிது தாங்கி உடன்போந்து புதுவை நகர்க்கரை சேர்ப்பாம். இது செய்யத் தவறுவோமாயின் செய்ந்நன்றி மறந்தவராவோம். இப்பணி முடியவே நான் சுதந்தர வாழ்விற் சுயேச்சையாய் வாழ்வேன். எப்படி யெனில்,

மதுகரம்மலர்குடைந்து தேன்பருகுமிடனெல்லாம்
நானும்விடாதோடி நற்றேனையுடனுண்பேன் :
எலிதின்னும்குருட்டுப்புள் கதறுகின்றஅமயத்தில்
மணியுருவமலர்புக்கு ஆனந்தத்துயில்கொள்வேன் :
வெளவாலின்முதுகூர்ந்து இளவேனில்தனைநாடி
ஓடியோடியோடி ஓயாச்சுகம்பெறுவேன் :
கிளையிற் றொங்கும் மலர்க்குட் புக்குச்
சுதந்தர வாழ்வைப் பெற்ற வடியாள்
எத்துணை இனிய வாழ்வை வகிப்பேன்
எத்துணை வினிய வாழ்வை வகிப்பேன்,

எனக் கூறி இலக்ஷ்மீகானிடம் அநுமதிபெற்றாள்.

தனது மனோபீஷ்டங்களெல்லாம் பூரணமாய் இனிது கைகூடிய இலக்ஷ்மீகரன் தனது மந்திரசாஸ்திரங்களையும், மாத்திரைக்கோலையும் பூமியை அகழ்ந்து ஆழத் துட்புதைத்துப் பேய்களைப் பணிகொள்ளும் கருத்தொழிலை விட்டு விலகினான்.

## பிற்கதை

மறுநாளுதயமாகவே ஆரியையும் மற்றைப் பூதங்களும் உதவிசெய்ய கப்பல் சமுத்திரத்தில் இனிதூர்ந்து கடிதில் புதுவையம் பதியைக் கிட்டிற்று. ஆரியை கண்ணீர் பொழிதா இலக்ஷ்மிகரனிடம் செலவு பெற்றுத் தன் இனத்தாராகிய மற்றைத்தெய்வங்களோடு கூட வனஞ்சென்று சுயேச்சையாய்க் காலத்தை ஆனந்தமாக வோட்டாநின்றாள்.

புதுவை நகரில் பரிதனற்கும் மிரந்தைக்கும் திருக்கலியாணமாகிய திருவிழா யாவரும் உகக்குமாறு வெகு சிறப்பாய் நடந்தது. இலக்ஷ்மீகரன் தனது மகளையும்

மருமகனையும் ஆசீர்வதித்து விட்டுத்தனது தம்பியோடு மிலான் நகரைக்கிட்டவே அந்நகரவாசிகள் ஆனந்த பரவசத்தோடு தமது பழமன்னனை வரவேற்றனர். நமது அறிஞன் சிந்தையை முக்தியில் நாட்டி தனது நாட்டை மநுநீதி தவருது ஆண்டுவாநின்ருன்.

நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவில் நெருஞ்சில் மூட்பாயும்
நெறியில் வழுவாதியங்கவல்லார்க்கு
நெறியில் நெருஞ்சில்மூட்பாயகில்லாவே.



# அநுபந்தம்

---

## கலியனும், குடியனும், கோமாளியும், செய்த சூதும் அவர் பட்டபாடும்

### தீவின் ஒருபால்

[விறகு சுமையைத் தாங்கிக்கொண்டு கலியன் வாநின்றன். இடிமுழக்கங் கேட்கா நின்றது]

கலியன் — இப்படுபாவிப்பயலைத் தோஷங்களெல்லாம் பிடித்து நோக்காட்டில் வீழ்க்காவா? ஏதேனும் வாய்திறந்து பேசின் வெளியாகிப் போகின்றதே! அவனிடுங் குற்றேவலைச் சிரமேற்கொண்டு முடிக்கும் பூதங்கள் நான் வெளியிடுவதை யறியினு மறியட்டும். நான் அவனை வாயாரத் திட்டி மகிழுறுவேன். தெய்வங்களென்னை ஹிம்சை செய்யினுஞ் செய்க. ஆயினும், அவை யவன் கட்டளை யிடினன்றி யென்னைத் தொந்தரவு செய்யமாட்டா. பாவி ஏவிவிட்டாலோ, அவை எனக்குச் செய்யும் அகிர்த்தியஞ் சொல்லுக்கடங்குமோ! குரங்குபோற் பல்லைக்காட்டி யேளனஞ் செய்து கடிக்கினுங் கடிக்கும்; முள்ளம்பன்றிபோல் வழியிற் படுத்துக்கொண்டு இடறி விழச்செய்து காலில் முள்ளைப் பாய்ச்சினும் பாய்ச்சும்; சில சமயங்களிற் பிளந்த நாப்படைத்த

நாகங்களாகி யெனதுடலைச் சுற்றிக்கொண்டு சீறுங்கால் எனது புத்தி கலங்கி பைத்தியங்கூட வாராநின்றதே!

[மழைக்குத் தப்பப் புகலிடம் நாடித் திருங்கன் வாராநின்றன்]

ஐயோ! ஈதென்ன? ஓர் தெய்வம் மனித வுருத்தாங்கி யென்னை வருத்த வாராநின்றதே! விறகு கொண்டு வருவதில் காலந் தாழ்த்ததால் என்னை ஹிம்சிக்க அப்படுபாவி இப்பூதத்தை யனுப்பினன் போலும். தப்பும் வழி யாது? நான் குப்புற வடித்துப் படுத்துக்கொள்கிறேன். ஓரோ வழி அதனது திருஷ்டிக்குத் தென்படாமலிருக்கக்கூடும்.

திருங்கன்—மழைக்குங் குளிர்காற்றிற்கும் சிறிது தப்பி யிருத்தற்கு இவணோர் செடியேனும் புதரேனுந் தென்படவில்லையே! திரும்பவுஞ் சண்டமாருதம் வரும்போற் றோன்றுகின்றதே! காற்று என்ன வேகமாய்க் கோஷிக்காநின்றது! கன்னங் கரேலென அதோ தோன்றா நின்ற கார்மேகஞ் சாமாரியாய்ப் பொழியாது விடவா போகின்றது! முன்னம் இடி யிடித்ததே, அதைப்போன்ற பேரிடி யுண்டாயின் எனது தலையை யெங்கேவைத்துக் காப்பாற்றுவேன்! மழை இலேசில் விடவா போகின்றது! குடங்குடமாய்க் கொட்டுமே,—ஈதென்ன? [1] மனுஷனோ? மீனோ? செத்ததோ? சாகாததோ?

---

[1]. இது கூறும்வரை கீழே குப்புறவடித்துப் படுத்திருந்த விகார ரூபனாகிய கலியனைத் திருங்கன் பார்த்திலன். பார்வையிற் றென்படவே திருங்கன் தனக்குத் தோன்றியதைக் கூறுநின்றான்

மீன்தான். மீன்செடி வீசாநின்றது. இஃதோர் விநோதமான மீன். நானிப்போழ்து ஆங்கில நாட்டிலிருப்பேனுயின், இந்த மீனைச் சிறிது வர்ணங் கொடுத்து ஜனங்கட்கு வேடிக்கை காட்டின், வெள்ளிக்காசு கொடுத்து வேடிக்கை பார்க்காத வோர் லோபியையேனுங் காணக்கூடுமோ! இந்த வக்கிரரூபம் எனக்குத் தக்க சம்பத்தை நல்குமே! எந்த மிருகத்தைக்கொண்டும் ஒருவன் அந்நாட்டில் பணத்தை மூட்டை கட்டலாம். அந்நாட்டார் பசியெடுத்துத் திரியுமுடவனுக்கு அரைச் செப்புக்காசு போடுதற்கும் மனமிளகாராயினுஞ், செத்துப்போன காட்டு மனுஷனை வேடிக்கை பார்க்க வென்றால் வெள்ளிக்காசும் போடக் கூசார்,—ஓ, இந்த மீனிற்கு மனுஷனைப்போ லிரண்டு கால்! [2] இருபக்கத்துச் செதில்களுங் கைகள் போற் றோன்றுகின்றன. இஃதென்ன, தொட்டால் வெதுவெதுப்பா யிருக்கின்றதே. சீ மீனன்று. ஏதோ காட்டுமனுஷன், இடியால் மொத்துண்டு மூர்ச்சையாய்க் கிடக்கின்றான் போலும். [இடி இடிக்கின்றது] ஐயோ, திரும்பவும் பெரும்புயல் வருகின்றதே! யாது செய்வேன்! இக்காட்டானுடைய அங்கிக்குட்புகுந்து கொள்வதே நலம்; வேறு புகலிடங்காணேன். கஷ்டகாலம் வந்தால் ஈனர்களோடும் படுத்துக்கொள்ள நேரிடும். இந்த அங்கியைச்

2. உற்று நோக்கிய போழ்து மீன்போன்ற விகார ரூபனுகிய கலியனது கால்கள் தென்பட்டன; பின்னர் கைகளும் தென்பட்டன.

கொண்டு நன்ருய்ப் போர்த்துக்கொண்டு புயலுக் குத்தப்பி நிற்பேன்.

[கையிற் சாராயப்புட்டியைக் கோண்டு குடி காரத் திப்பன் வார்நின்றன்]

திப்பன்—

' இனியோர்போதுங் கடலுக்குப்போகேன்
கடலுக்குப்போகேன் தண்ணீரிற்சாகேன்
சாவதாயிருந்தாலும் தரையிலேசாவேன் '

இதென்ன பைத்தியகார ஒப்பாரிப் பாட்டு! இதோ இதைப்பருகி ஆனந்தமுறுவேன் [குடித்துக்கோண்டு மற்றும் பாடித் திரும்பவும் குடிக்கிறன்]

**கலியன்**—[பயந்து] ஐயோ, என்னை ஹிம்சை செய்யாதே!

**திப்பன்**—இங்கே தோன்றுவதென்ன? பேய்கள் காட்டு மனுஷவேஷங்கொண்டு [3] என்னை மருட்டப்பார்க் கின்றனவோ! கடலில் வீழ்ந்து மாணத்திற்குத் தப் பிக் கரையேறிய தீரனுகிய வென்னை, நீ உனது நாலு பாதங்கொண்டு பயமுறுத்தப் பார்க்கின் ருயோ! இத் திப்பன் உயிரோடு மூச்சுவிடும் வரை ஒருவர்க்கும் பயப்படுவானல்லன்.

**கலியன்**.—[மற்றுந் திடுக்கிட்டு] ஐயோ பூதமென்னைப் பிராணகஷ்டஞ் செய்யா நின்றதே! [4]

---

[3]. குடிகாரனுகிய திப்பன், வெளியே தோன்றும் நாலு கால்களையும் உள்ளிருந்தெழும் ஒரு குரலையுங்கண்டு, மந்திர சக்தியாற் கட்டுண்ட அத்தீவில் பிசாசங்கள் தன்னை இவ்வாறு மருட்டுவதாகப் பயமுறுகின்ருன்.

[4] கலியனை உள்ளபடி ஒருவரும் துன்பஞ்செய்திலராயி னும்,திருங்கனையும் திப்பனையும் பூதங்களென வெண்ணிக் கலி யன் ஏதேனும் துன்பம் நேருமோ வென நடுக்கமுற்ருன். அந் நடுக்கத்தைத் திப்பன் நளிர்சுரத்தால் வந்த நடுக்கமெனவெண்ணு கிருன்.

திப்பன்—ஓ, இவன் இக்காட்டில் வாழும் நான்கு கால் கொண்ட ஓர் விகாரரூபன்போலும், குளிர்காய்ச்சல் பொறுக்கலாற்ருது நடுக்கமுறுநின்ருன். இவனுக்கு நமது பாஷை யெவ்வாறு தெரியவந்தது! குளிர் காய்ச்சல் காரணமாக உதறல் கொண்டிருப்பது மெய்யாயின், சிறிது சாராயத்தை இவன் வாயிற் பெய்து நடுக்கத்தைப் போக்குவேன். அதனுல் இவன் சுரந்தீர்ந்து என்னேடு பழகிச் சாந்த முற்ற பின், நானிவனைப் புதுவை நகர்க்குக் கொண்டுபோய் அரசனுக்குத் தக்க சம்மானமாகக் கொடுப்பேனு யின் எனது அதிர்ஷ்ட மெவர்க்குண்டாகும்!

கலியன்—[மற்றும் நடுநடுங்கி] இனிச் சீக்கிரமாக விறகைக் கொண்டுவருகிறேன். என்னை வருத்தினதுபோதும்! போதும்! போதும்! போதும்!

திப்பன்—இவனைக் குளிர் தூக்கித் தூக்கிப் போடா நின்றது. என்ன பாவம்! அறிவு மயங்கிப் பிதற்று கின்ருன். இதோ யிதைக் குடியடா. உனது நடுக் கந் தொலைந்துபோம். இவனுக்குத் தேகஞ் சுவஸ்த மாகின் எனது பாக்கியத்திற் களவுண்டோ!

கலியன்—இதுவரை யிப்பூத முள்ளவா றென்னை யதிக வருத்தஞ் செய்திலது. ஆயினுஞ் சிறிது நேரத்தில் பெரிய ஹிம்சை செய்யவே செய்யும். இது நடுங்குவதைப் பார். [5] இலக்ஷ்மிகரன் இதனைத் தூண்டாநின்ருன். பெருங்கேடு விளையுமே!

---

5 திப்பன் மிதமிஞ்சிச் சாராயத்தைச் சாப்பிட்டதால் போதையுற்றுத் தேகம் நடுக்கங்கொண்டது. கலியன் அதனை யுணராது வேறு காரணத்தால் விளைவதாக வெண்ணுகிருன்.

திப்பன்—சீ! வாயைத்திறவடா. இதை நன்றாகக் குடி. உனது பைத்தியம் விட்டுப்போம். நன்றாகப் பேசவுஞ் செய்வாய். [கலியன் சாராயத்தை நன்றாகக் குடித்து ருசி காண்கின்றான்] இன்னம் வாயைத்திற, நன்றாக வூற்றுகிறேன்.

திருங்கன்—இந்தக் குரல் எனக்குத்தெரிந்தகுரல்தானே! இது யார் குரலென்றால்—.ஆனால் அவன் கடலிலாழ்ந்து மாண்டுபோனானே. இவை யாவும் பிசாசங்களே. ஐயோதெய்வமே யென்னைக்கா!

திப்பன்—ஈதென்ன! மற்றும் அதிசயம். இக்காட்டானுக்குக் கால் நாலு! வாக்கிரண்டு! ஓர் வாக்கால் வாழ்த்தாநின்றான். மற்றோர் வாக்கால் பழிக்காநின்றான் இப்புட்டியிலுள்ள சாராய முழுமையுஞ் செலவானாலு மாகுக. இவனது நளிர்சுரத்தை இதனைக் கொண்டு முற்றிலும் வாசி செய்வேன். எங்கேயடா வுனது மற்ற வாயையுந் திற.

திருங்கன்—ஏ, திப்பா!

திப்பன்—ஏ, ஈதென்னே? எனது பெயரை யறிந்து கூப்பிடாநின்றதே! காட்டானன்று; இது பிசாசமே. நானிதனை விட்டுத் தப்பிப்பிழைத்தோடவேண்டும்.

திருங்கன்—திப்பா! நீ உள்ளவா திப்பனேயாயின் என்னைக் கையாற் றீண்டி யென்னோடு பேசு. பயப்படாதே. நானுனது நண்பனாகிய திருங்கனல்லனோ!

திப்பன்—நீ யுள்ளவா திருங்கனேயாயின் இச்சிறு பாதங்களே யுன்னவையாம். இவற்றைப்பற்றி யிழுக்கிறேன். வெளியே வா! [திருங்கன் வெளியே வருகிறான்] ஓ! ஹோ! ஹோ! திருங்கன்தான். நீ

யெப்படியடா இவனுற்ருய்? இந்தக் காட்டானே
டுறவு உனக்கெவ்வாறுண்டாயிற்று ?

திருங்கன்—நானிந்தப் பயலே யிடியாற் சாவுற்றவோர் காட்டானுக வெண்ணிப் புயலுக்குப் பயந்து அவனது குப்பாய * த்துட் புகுந்தேன். இருக்கட்டும், நீகடலில் வீழ்ந்து இறந்து போனதாகவே யெண்ணியிருந்தேன். தெய்வாதீனமாய் கடலுக்கிரையாகாது தப்பிப்பிழைத்தாயா ? அப்படியானல் புதுவைநகர் வாசிகளுள் இரண்டுபேர் பிரசண்ட மாருதத்திற்குந் தப்பிப் பிழைத்தோம். புயல் ஓய்ந்துபோயிற்ரு ?

கலியன்—இவர்களைப் பார்த்தால் மிகவும் நல்லவர்களாய்த் தோன்ருநின்றனர். இவர்கள் பூதங்களல்லராயின் நல்லதே. ஆயினு மிவர் [திப்பனை நோக்கி] தேவாமுதத்தைக் கையிலேந்தி நிற்கும் இந்திரனே. நானிவரை நமஸ்கரிப்பேன்.

திப்பன்—அடா திருங்கா, நீ புயலுக்கெப்படித் தப்பிப் பிழைத்தாய்? இந்தப் புட்டிமேலாணையிட்டு நீ தப்பிய வழியை உறுதியாகச் சொல். நானெப்படித் தப்பினேன் தெரியுமாடா ? கப்பலாழும் போழ்து கப்பலோட்டிகள் ஓர் சாராயப் பீப்பாயைக் கடலில் வீழ்த்தினர். நான் அதனையே தெப்பமாகக் கொண்டு கரைவந்து சேர்ந்தேன். சாராயம் பருகுதற்குப் பாத்திரமாக வழியிற் கிடந்த வோர் மரப்பட்டையைக் கொண்டு இப்புட்டியைச் செய்தேன். நீ பிழைத்த வயணத்தைச் சொல்லடா !

திருங்கன்—வாத்து நீந்துவது போல் நீந்திக் கரை யேறினேன் ; [குடித்துக்கொண்டு] ஏ, திப்பா இச்சாரா

யம் இன்ன மேதேனு மிருக்கிறதா ? வெகு நன்று யிருக்கிறதே !

திப்பன்—ஓர் பீப்பாய் நிறைய விருக்கிறதடா. அதைக் கடலருகே யிருக்கும் ஓர் பாறையின் குகைக்குள் பத்திரமாக வைத்திருக்கிறேன். வேணமட்டும் பருகி யானந்த முறலாம். [கலியனை நோக்கி] அடே, அஷ்ட வக்கிரா*! உன்னைத் தூக்கித் தூக்கிப் போட்ட காய்ச்சலொழிந்ததாடா ?

கலியன்—தாங்கள், சந்திரலோகத்தி லிருந்துதானே யென்னைக் காப்பாற்ற இவணுற்றீர்கள் !

திப்பன்—[வேடிக்கையை மேற்கொண்டு] ஆமடா, நான் தானடா, நிலாவில் காணப்படும் மகா புருஷன். [6]

கலியன்—ஆமாம், நான் தங்களைப் பன்முறை சந்திரனிடத்தே வீற்றிருக்கக் கண்டுளேன். என்னையாளும் மிரந்தா தேவியுந் தங்களையுந் தங்களோடு கூட விருக்கும் நாயையும் புதரையு மெத்தனையோ முறை எனக்குக் காட்டி யிருக்கிறார்கள். நான் தங்களை மற்றும் நமஸ்காரஞ் செய்யா நின்றேன். நான் தங்கட்கு அநேக பணிவிடைகள் புரிவேன் ;தின்னுதற்கினிய கனிகளைப்பறித்து வருவேன் ; தண்ணீரில் விளையாடும் மீன்களை உங்கட்கு விருந்திடுவேன்; முன் நான் தொண்டு பூண்டு நின்ற வப் படுபாவிப் பயல் தொலைந்து போகட்டும். மற்றும் உண்ணுதற்

---

6 நிலாவிற் றோன்றும் களங்கத்தை ஓர் புருஷனும் நாயும் ஓர் புதருகே யிருப்பதாகப் பாவிப்பது ஐரோப்பாவிலுள்ளவர்கட்கு வழக்கம்.

கினிய பக்ஷிவர்க்கங்களை யெளிதிற் பிடிக்கும் வழி யையுங் காட்டுவேன்.

திப்பன்—ஏ திருங்கா! அரசனு மேனையோருங் கடலி லாழ்ந்து போயினரே. நாமே இவ்வடவியை யாள் வோம் [கலியன் குடிக்கிருன்]

கலியன்—ஏ பண்டை யாண்டே!
உன்னை விண்டேனுண்டே!
இனி யொருபோதும்
உன் பொருட்டாக
விறகு சுமக்கமாட்டேன்
சட்டி சுரண்டமாட்டேன்
பானை கழுவமாட்டேன்—கலியன்
அதிர்ஷ்டம் பெற்ருன்—வேருேர்
ஆண்டைக் கடியனுனன்
ஆனந்தம் ஆனந்தம்
பிரம்மானந்தம்.

[இவ்வாறு கலியன் சந்தோஷமுற்று இரு வரையுமிட்டுக்கோண்டு சென்றுஅவ்வட வியின் அதிசயங்களை யெல்லாங் காட்டி ஞன். பின்னர் மூவருங் கடலோரத்தைக் கிட்டிச் சாராயபீப்பாயைத் திறந்து மது வை வேண்டியமட்டும் பருகி ஆனந்தக் கடலுள் மூழ்கினர்]

திப்பனை யவ்வடவிக்கு அரசனுகக் கருதிய கலி யன் இலக்ஷ்மீகானை வினை முடிக்கவெண்ணங்கொண்டு திப்பனை நோக்கிச் சொல்லுகிருன், 'யானெரு கொடிய னுக்கடிமை; அவன் மந்திரயோகி; தனது கபட ஞானத் தாலித்தீவை அவன் என்னிடமிருந்து அபகரித்துக்

கொண்டான். நீர் எனது பழியைத் தீர்த்துத் தரவேண்டும். அவனைத் தொலைத்துவிட்டால் நீரே இவ்வடவிக்கு ராஜன். நானே யுமது குற்றேவல் புரியு மடிமையாவேன்.

திப்பன்—அவனை யெப்படியடா தொலைப்பது ?

கலியன்—அவன் அயர்ந்து நித்திரைபுரியும் அமயத்தி லும்மைக் கிட்டக் கொண்டுபோய் விடுவேன். நீர் ஓர் ஆணியை அவனது தலையிற் கடாவி யவனை யமபுரத்திற் கனுப்பிவிடலாம். மத்தியான போஜன மானபின் சிறிது துயில்கொள்வது அவனுக்குப் பழக்கம் : நீர் முதலில் அவனது புத்தகங்களைக் கவர்ந்துகொள்ள வேண்டும். மந்திரங்களடங்கிய அச்சுவடிகளே யவனுக்குப் பலம். சுவடிகளைப் பிடுங்கிக்கொண்டால் ஐயாவிற்கு ஒன்றும் ஓடாது. ஓர் பூதத்தையு மேவல்கொள்ளவு முடியாது. சுவடி களைப் பற்றிக்கொண்டு அவனது மண்டையை யுடைத்துப் போடும். அவனுக்கோர் புத்திரிகா ரத்னம் உளள். அவள் பேரழகி. அவளை நீர் கட் டிக் கொள்ளலாம்.

திப்பன்--நீ சொல்வதெல்லா மிகவும் நல்லன. கிழவ னைக் கொன்று மடந்தையைக் கைப்பற்றுவேன்.

[இவற்றையெல்லாம் அருவமாயிருந்து கவனித்து வந்த ஆரியை ஓர் தேவகானத்தைப் பாடி யம்மூவ ரையும் அதன் வயப்படுத்திக் கல்லினு முள்ளினும் ஓட்டி யிழுத்துக்கொண்டு ஓர் நாற்றக் குட்டத்தில் வீழ்த்திவிட்டு இலக்ஷ்மீகாற்கு இம்மூவாது சூழ்ச் சியை வெளியிட்டுப் பின்னர் தம்பதிகட்கு மாயா நாடகத்தைத் தரிசிப்பித்தாள். அந்நாடகம் நிகழ்

தாநிற்கையில் இலக்ஷ்மீகரன் இத்துட்டர்கள் செய்ய வெண்ணிய சூதை நினைத்துத் திடீரென நாடகத்தை நிறுத்தி, இம்மூவருங் குகைக்குள்ளே கபடமாய்ப் பிரவேசித்துத் தமது சூழ்ச்சிப்படி கொலைத்தொழிற்கு ஒருப்படு மமையத்தில், ஆரியையையும் அவள் வழி தொழில்புரியு மற்றைத் தெய்வங்களையும் வேடர்களாகவும் வேட்டைநாய் களாகவும் உருமாற்றி அவற்றையேவி இம்மூவரை யுங் காட்டிலுங் காட்டிலும் ஓடவோட வடித்துத் தவிக்கும்படி செய்தான். பின்னரே இலக்ஷ்மீகரன் தனது பகைஞரை யறிவுறுத்தி மன்னித்து அன்பர் களாக்கிக் கொள்ளுகிறான்].

---

# அரும்பத விளக்கம்

அ

அகட்டில்=வயிற்றில். அகடு=வயிறு.
அகீர்த்தியம்=அடாத செயல்.
அஞ்சல்=பயப்படாதே. அல் என்பது எதிர்மறையை யுணர்த்தும்.
அடவி=காடு.
அணங்கு=தெய்வப்பெண்.
அந்தர்யாமி=உள்ளிருந் தாள்வோன்; கடவுள். மறைவாய் ஜீவராசிகளது ஹிருதயத்துள் இருந்து ஆட்டிவைக்கின்றவனாதலின், கடவுள் அந்தர்யாமி எனப்படுவன்.
அசூயை=பொறாமை.
அபாத்திரன் = தகுதி யற்றவன்.
அப்சரஸ்=நீரரமகள்; water-nymph.
அயிராது = சந்தேகத்திற்கிடனின்றி; without room for suspicion.
அரங்கு=கூடம்; hall.
அருங்கலம்=அருமையானஆபரணம்; rare ornament
அருவமேயி = கட்புலனிற் கெட்டாத தேகம்; invisible body.
அரற்றிய=கதறிய.
அலமரும் = தியக்கங்கொள்ளும்.
அஷ்டவக்கிரா=எட்டுக் கோணலான தேகத்தானே. இது விளி.

ஆ

ஆர்வம்=ஆசை.
ஆவேசம்=மனத்தைப் பிடித்து அதனை யோர் தொழிலிற் புகுத்த வல்ல வோர் சக்தி; பேய். கோபம் என்பது ஓர் சக்தி; அஃது ஒருவனது மனதைப் பற்றின் கொடுஞ் செயற்கண் அவனைச் செலுத்தும்

இ

இடுக்கண்=கஷ்டம்; இக்கட்டு
இருதயம்=ஹிருதயம்; நெஞ்சம்; உள்ளம்.
இருசுடர்கள்=சூரியசந்திரர்.
இரும்பூது=அதிசயம்.
இன்றியமையாத = அவசியமான; indispensable.

ஈ

ஈது=இஃது; இது.
ஈயக்குண்டு=Plumbline.

உ

உடுக்கணம்=நக்ஷத்திரக் கூட்டம்.

உதகம்=தண்ணீர்.

உதரம்=வயிறு. குண்டோதரன், லம்போதரன் என்பன பானை வயிற்றன், தொங்கும் வயிற்றினன் என்ப்பொருள் படுவதை நோக்குக. மற்றும் சகோதரர் என்பார் ஒரே வயிற்றில் கூடப் பிறந்தவர் எனும் பொருள் கொள்வதையுங் காண்க.

உந்தை=உனது தகப்பன்.

உள்ளீடு=இரகசியம், அந்தரங்கம், மறைபொருள்.

ஊ

ஊழ்=பண்டைப் பழவினை, முற்பிறப்பில் புரிந்த வினை. 'முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே' எனும் இடத்தில் முன் செய்த தீவினை யென்பது ஊழைக்குறிக்கும்.

ஊக்கியவாறே=தைரியம் தூக்கிவிட்ட வண்ணம். ஊக்கம் என்பது தைரியம்.

எ

எந்தை=எனது தகப்பன்.

எற்கு=எனக்கு

ஏ

ஏதம்=தீங்கு, பொல்லாங்கு.

ஏளனம் = பரிகாசம், ridicule.

ஒ

ஒறுக்காது=தண்டனை செய்யாது ; சிக்ஷை செய்யாமல்.

க

கந்தம்=வாசனை.

கத்தியம்=வசனம், prose.

பத்தியம்=பாட்டு, poetry.

கரித்தைலம்=தார் ; tar or pitch.

கா

காந்தர்வக் குழந்தை : காந்தர்வர் என்பார் ஓர் வகைத்தேவர் ; இவரைத் தமிழோர் யாழோர் எனக்கூறுப. அழகாலும் இசைபாடுஞ்சிறப்பாலும்மேம்பட்டவர். காந்தர்வக் குழந்தைகள் அழகுக்குப் பேர்பெற்றன எனக் கூறுவது மரபு.

காளிதாசன் : காளியின் அருளைப்பெற்ற ஓர் வடமொழிப் புலவர். இவர் அநேக அருமையான நாடகங்களை வடமொழியிலியற்றி யுளார். அவற்றுள் மிகச்சிறந்தது சாகுந்தலம். ஷேக்ஸ்பியரெனும் மகாகவி ஆங்கில பாஷையில் பற்பல வரிய நாடகங்களை யியற்றியதால் ஆங்கில காளிதாசனெனப்பட்டார்.

காலாநின்றது = பிரகாசியாநின்றது.

கி

கிருபை பாலிக்கும் முறை= அருள் செய்யும் வழி.

கு

குணக்குன்றம் என்பது மேலான குணத்தை யுடையோன் எனும் பொருளைப் பயக்கும்.

துப்பாயம் = அங்கி; dress. இது மலையாளச்சொல்
துயினீற = குடைந்த.
தூக்குறு = குரங்கின் வடிவம்.
துழவி = குழந்தை

கூ

கூஉய் = கூவி, அழைத்து.

கோ

கோட்ட மடக்கல் = துஷ்டத் தனத்தை யடக்குதல்

கோ

கோலிய = வரைந்த
கோஷம் = சப்தம்

ச

சதா = எப்போழ்தும்
சங்கேதம் = குறி ; sign

சி

சித்தஜன் = சித்தத்திற் பிறக்கும்காமன்,மன்மதன்,Cupid. நினைத்தமாத்திரத்தில் மனதில் காமம்பிறப்பதால், மன்மதன் சித்தஜனெனவும் கூறப்படுவன்.
சிரமம் = கஷ்டம்
சிற்சத்தி (சித்சத்தி) = அறிவாகிய பலம் ; force of intellect.
சிலாதலம் = கல், stone.

சீ

சீலம் = ஒழுக்கம். சீலமென்பது நல்லொழுக்கத்தையே குறிக்கும்.

செ

செவிச்செல்வம் = கல்வி. செவியின் வாயிலாக விளையும் ஞானமாதலின் கல்வி செவிச்செல்வ மெனப்படும். 'செல்வத்துட் செல்வம் செவிச்செல்வ மச்செல்வம், செல்வத்து ளெல்லாம் தலை' எனத் திருவள்ளுவர் கூறினர்.
சேவிலித்தாய் = வளர்த்த தாய், nurse. பெற்றதாய் நற்றய் எனப்படுவள்.

சோ

சோக கோஷம் = அழுகைக் குரல்.

தூ

தூமம் = புகை.

தே

தேருட்ட = தெளிவிக்க.
தேற்றேன = தெளிவாக.

தோ

தோல்லாசிரியர் = பண்டைக் காலத்துப் புலவர்; ancient authors.

ந

நகைச்சுவை = ஹாசிய ரசம். சிரிப்பை விளைவிக்கும் வண்ணம் எழுதப்படுவது. நகைச்சுவை ஆங்கிலத்தில் humour எனப்படும்.
நயவஞ்சகம் = நன்மை புரிவதுபோல் வேடங்காட்டித் தீமை புரிதல் ; smiling roguery.
நரன் = மனுஷன்.
நவபூமி = புதிய தேசம் ; the newcontinent of America.

நா

நாவாய் = கப்பல்.
நாளுலந்து = வாழ்நாள் கழிந்து.

நி

நிதரிசனம் = உதாரணம்.
நிர்மானுஷியம் = மனுஷ சஞ்சாரமின்மை.
நிறுவ = ஸ்தாபிக்க ; to establish.

நு

நுசுப்பு = இடுப்பு, waist. கப்பலைப் பெண்ணாய்ப் பாவிப்பது மேற்றிசைக் கவிவாணர் மரபு.

நே

நேத்திரோத்ஸவம் = கண்ணிற்குத் திருவிழா ; feast to the eye.

ப

பச்சாதாபம் = என் செய்தோமெனமனம்நைதல்; repentance.
பசும்புற் சக்காம் = சிறிய வுருவினவான மோகினிகள் வளையம் செய்து விளையாடும் நிலத்தில் பசுமையான புல் முளைக்குமென்ப. ஆயினும் அப்பசும்புல்லை ஆடுமாடுகள் அருந்தமாட்டா.
படன் = சிப்பாய் ; soldier.
பத்தியம் = பா, poetry. கத்தியம் = வசனம் ; prose.
பாதந்திரன் = பிறர் வயப்பட்டவன்.
பரிவுற்று = இரங்கி.
பக்ஷங்கள் = சிறகுகள்.

பா

பாரீர் பாரீர் : இதனை அடுக்குமொழியாகவும் சிலேடையாகவும் பொருள் காணலாம். சிலேடையாகப் பாவிக்கின் 'மண்ணுலகத்தவரே, பாருங்கள்' எனப் பொருள்படும். சிலேடை என்பது pun, அல்லது play upon words.

பி

பிரசண்ட மாருதம் = பிர + சண்ட + மாருதம், மிகக் கொடுங்காற்று (பதப்பொருள்) இதனைச் சிலர் வேங்கைப் படைக் காற்றென்பர்.
பிராத்ருவாஞ்சை = கூடப் பிறந்தவன்பால் விளையும் அன்பு ; brotherly love.
பிராந்தி = மயக்க வுணர்ச்சி; delusion.
பில்லிசூனியம் = witchcraft
பின்றோன்றல் = தம்பி.

பு

புத்தேள் = தேவன், an angel
புன்முறுவல் = புன்சிரிப்பு ; smile.

பொ

பொய்யா மொழியன் = இது திருவள்ளுவர்க் குற்றவோர் காரணப் பெயர். அவர் வாக்குப் பொய்க்காதன்றே! பொய்யாமொழிஎனப் பெயரியவோர் தமிழ்ப் புலவனும் ஓர் காலத்திலிருந்தான்.

ம

மகாமாயம் = பெருமாயம், great delusion. மாயமென்பது இல்லாததை உள்ளதுபோற் றோன்ற வைத்தலையும் உள்ளதை இல்லாததுபோல் மறைத்

தலையுங் உணர்த்தும். இதனை, இந்திரஞாலமென்பர்.

மடி=சோம்பல், idleness.

மண்டலச் சக்கரம்=மாந்தரீகன் தரையிலேனும், தகட்டிலேனும் வட்டமாக வரையும் உருவம்; magic circle

மந்திரயோகி = மறைமொழியால் (மந்திரத்தால்) நன்மையையேனும் தீமையையேனும் இயற்றும் ஆற்றலைப் பெற்றவன். A man that can bring upon good or evil by the power of his spell (mantric word)

மரக்கலம்=கப்பல். மரத்தாலமைந்த வோர் பாத்திரத்தைப் போன்றிருப்பதால் மரக்கலம் கப்பல் எனும் பொருட்டு (பொருளை யுடையது).

மனப்பால் குடித்தல் = வீணான மனோராஜ்யஞ் செய்தல். building castles in the air.

மா

மாருதம்=காற்று, அநுமான் காற்றின் புத்திரனாதலின் மாருதியெனப் படுவதைக் காண்க.

மு

முகமன்=முகஸ்துதி.

மூ

மூரண்=வலி, physical strength.

மூ

மூர்க்கன்=கல்வி யின்மையால் அறிவு தெளியாதவன்.

மே

மேய்ச் சம்பவம்=உள்ளபடி நடந்த செய்கை, a real event.

மெல்லியல்=பெண், மென்மையான தன்மையை யுடையாளென்பது பதப்பொருள். Cf. the tender sex.

யா

யாக்கை = ஆக்கை, தேகம். கட்டப்பட்ட பொருளென்பது பதார்த்தம். யா=கட்டு (ஏவல் வினை). யாத்தல்=கட்டுதல்.

யோ

யோகினி=மந்திரமுதலிய தந்திரங்களாற் பிறர்க்கு நன்மையேனும் தீமையேனும் செய்யவல்லவள் ; a witch. பெரும்பான்மையும் யோகினிகள் தீமையையே விளைவிப்பர்.

வ

வசிய மந்திரம்=பிறர் மனத்தை யடிமைப்படுத்த வல்ல மந்திரம்,mesmeric words magic spells.

வதனம்=முகம்.

வதுவரர்=பெண்ணும் மாப்பிள்ளையும்.

வயிரப் படையாளன் = வஜ்ராயுதத்தை யாள்பவன், தேவேந்திரன் ; the wielder of the thunderbolt, Indra.

வா

வாமனன் = குள்ளன், a man of short stature.

வாளா = சும்மா; ஓர் செயலுமின்றி; quietly.

வி

வித்தை = மந்திரவித்தை.

வித்யா மண்டபம் = கல்வி பயிலும் கூடம்; study room.

விமோசனம் = நிவிர்த்தி, deliverance.

வீ

வீரப் பட்டம் = Conferring the title of knight by dubbing.

க்ஷா

க்ஷாத்திரம் = பகை.

---

# வழூஉக்கவிரவு

| பக்கம். | பிழை | திருத்தம் |
| --- | --- | --- |
| iii ம் பக்கத்தில் 3,4-ம் வரிகள் | வாமனனாய் வந்த திருமால் தமது குறளடியிரண்டால் | திருமால் குறளாய்த் தோன்றித் தமது இரண்டடியால். |
| xiii-ம் பக்கத்தில் 6-ம் வரி | பயன்படுவதை | பயன்படுவதை, |
| 18 ம் பக்கத்தில் 4-ம் வரி | ஆரியையோடு பேசுதற்கே | ஆரியையோடு பேசுதற்கே. |
| 41-ம் பக்கத்தில் 13-ம் வரி | என்றான். | எனச்சொல்லி அகல்வானாயினன். |
| ஷை | தனக்குட் | |
| 45-ம் பக்கத்தில் 1-ம் வரி | எலுமிச்சங் | சிறிது நேரத்தில், எலுமிச்சங் |
| 48-ம் பக்கத்தில் கடைசி வரி | நான் | எனச் |

உ

# பிரசண்டமாருதம்

---

## பரிக்ஷை வினாக்கள்

I. ஷேக்ஸ்பியரை நிரம்பிய கல்விச் செல்வமில்லாதவரெனச் சிலர் கூறுகிற்பதால் அவரது புகழ் தேயாது மற்றும் வலியொடு பிரகாசியாநிற்கும். காரணம் கூறுக.

II. ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களுள் பிரசண்டமாருதமே கடைமுடிவா யெழுதப்பட்டதெனக் கொள்ப. இவ்வுண்மையை வலியுறுத்தும் காரணங்களை எடுத்துக் காட்டுக.

III. தொல்லாசிரியர்கள் (Ancient Greek writers of drama) ஏற்படுத்திய நாடக வமைதியாம் முக்கூற்றிலக்கணம் யாது. இவ்விலக்கண வரம்பு இந்நாடகத்துள் மீறப்படவில்லை யென்பதை எடுத்துக் காட்டுக.

IV. இந்நாடகத்தால் மாந்தர்க்குரைக்கப்படும் பேருறுதி யாது? அவ்வுறுதி இந்நாடகத்தால் எவ்வாறு விளக்கம் பெறுகின்றதென்பதனை எடுத்துக் காட்டுக.

V. 'இவன் தூக்குமாத்திற் கென்றே பிறந்தவன்' எனக் காஞ்சாலன் கூறிப் பிரசண்டமாருதத்திற்கு அஞ்ச வேண்டா'மென மனத்தைத் தேற்றுகின்றான். அவன் எண்ணம் யாது?

VI. உலக நிலையாமை தேக நிலையாமை எனும் பேருறுதிகள் இந்நாடகத்துட் கூறப்பட்ட சந்தர்ப்பம் யாது? கூடிய மட்டும் மகாகவி கூறியவாறே அதனை எடுத்துரைக்க.

VII. மிரந்தை அறிவாலும் கருணையாலும் கற்பாலும் உயர்ந்த மங்கையென்பதை எவ்வாறுணரலாம்?

VIII. கருணையாளனுகிய இலக்ஷ்மீகரன் கலியனை ஏனோ மிகக் கடுமையான வேலைக்கண் புகுத்தினன்?

IX. ஆரியை கப்பலிலிருந்தாரை மாயையால் மருட்டிக் கடலிற் குதிக்கச் செய்த விந்தையை எடுத்துரைக்க.

X. இலக்ஷ்மீகரனது மந்திர சக்தி எத்தகையது?

XI. காஞ்சாலன் மிகுந்த அருளையுடையவனென்பதை எவற்றாலுணரலாம்?

XII. இந்நாடகத்துள் ஆங்கில நாடு கூறப்பட்டிருக்கிறது. சந்தர்ப்பத்தை எடுத்துக் காட்டுக.

XIII. ஆரியை சுவாதீனம் பெற்றபோழ்து பாடிய பாட்டியாது? பரிதனனை இலக்ஷ்மீகரனிடம் காந்தர்வத்தாற் பிணித்து ஆரியை இட்டுக்கொண்டு சென்றபோது கானஞ் செய்த பாட்டையேனும் அதன் கருத்தையேனும் உரைக்க.

XIV. சிக்கராக்கி யாவள்?

---

Madras: The Guardian Press, Mount Road.